ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ:

பெரியவாச்சாம்பிள்ளை திருவடிகளேசரணம்.

ஸ்ரீபகவத்ராமாநுஜ விரசிதமான

# மந்த்ரத்ரயமும்.

இதற்கு
அபாரகருணாம்ருத ஸாகரரான
பெரியவாச்சாம்பிள்ளை அருளிச்செய்த
வயிரவுருககானவ்யாக்யானமும்.

இவை
ஸ்ரீ - உ - திருமழிசை - மஹாஹாஷீயம்
ஸ்ரீரங்காசாரியரால்
நாநாதேஸ ஸமாநீதபஹு ஸ்ரீகோசங்களைக்கொண்டு,
பரிசோதித்து

பத்தி-இராமாநுசுலு நாயகரவர்களால்
ஸ்வகீய
ஸ்ரீநிகேதன அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

ஆழ்வார் திருவவதாராதி-௪௯௮௫ - சித்ரபாநுஸூ.

*Madras.*

1882.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## தனியன்கள்.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் । *
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ॥ ............ *
லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம் । ............ *
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ॥ ... *

யோ நித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம ............ *
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே ............ *
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ: .... *
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ............ *

மாதா பிதா யுவதயஸ்தநயா விபூதி: .... ............ *
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் । ................ *
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ............ *
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥ ......... *

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத .................. *
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் । ....... *
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஶ்ராந் ......... *
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ॥ ...... *

வந்தே வேதாந்தகர்பூர சாமீகர கரண்டகம் । .......... *
ராமாநுஜார்யமார்யாணாம் சூடாமணிமஹர்நிஶம் ॥ *

## பெரியவாச்சான்பிள்ளை தனியன்.

ஸ்ரீமத்க்ருஷ்ண ஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே । *
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதர: ஸதா ॥ *

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# கத்யத்ரயம்.

## பெரியவாச்சான்பிள்ளைவ்யாக்யானம்.

ப்ரவேசம்—.ஸ்ரீபாஷ்யத்தில், "தல்லப்தி" இத்யாதிவாக்ய ஜந்யஜ்ஞானமே மோக்ஷஸாதனமென்றும், கர்மஜ்ஞானஸமுச்சயமே மோக்ஷஸாதனமென்றும், சொல்லுகிற குத்ருஷ்டிகளைநிரஸிக்கைக்காக, கர்மாங்ககமாய், வேதநத்யாநோபாஸன சப்தவாச்யமாய், பக்திரூபாபன்னமான உபாஸநாத்மகஜ்ஞானமே - வேதாந்தப்ரதிபாத்யமான மோக்ஷஸாதநமென்று, இவர் நிச்சயித்து அருளிச்செய்கையாலே, இவர், மோக்ஷஸாதனமாக வறுதியிட்டவர்த்தமிதுவே யென்றுகொண்டு, தம்முடைய ருசிபரிக்ருஹீதமான வர்த்தத்தையே விச்வஸித்திருக்கும் ஸாத்விகரித்தையே விச்வஸித்திருக்கக்கூடுமென்று பார்த்தருளி, ஆசாரியருசிபரிக்ருஹீதமுமாய், தமக்குத்தஞ்சமுமாகத்தாமறுதியிட்டிருக்குமர்த்தம் ப்ரபத்தியென்னுமிடத்தை, யிக்கத்யரூபேண வெளியிட்டருளுகிறார் ஆனால், இப்ரபத்திதன்னையேகொண்டு, குத்ருஷ்டி நிரஸனம் பண்ணுதொழிவானென்னென்னில், ப்ராஹ்மணன், சண்டாளனுக்கு வேதத்தை யுபதேசித்தாப்போலே தூரஸ்தரானவர்களுக்கு, பரமரஹஸ்யமானவிவ்வர்த்தத்தை வெளியிடவொண்ணாதென்று பார்த்து, அவர்களிழிந்தசாஸ்த்ரமுகத்தாலேயே அவர்களைநிரஸித்து, சாஸ்த்ர தாத்பர்யமான ஸ்வஸித்தாந்தத்தை யிம்முகத்தாலே வெளியிடுகிறார். வேதாந்தங்களிலே, மஹாபதமாகச்சொல்லுகிற பக்தியைக்காட்டில், இப்ரபத்திக்கேற்றமென்னென்னில்; அது—அதிக்ருதாதிகாரமுமாய், துஷ்கரமுமாய், விளம்ப்யபலப்ரதமுமாய், ப்ரமாதஸம்பாவனையுள்ளதுமாய், ஸாத்யமுமாய், ஸ்வரூபானனுரூபமுமாய், ப்ராப்யத்துக்கு விஸத்ருசமுமாயிருக்கும். இதுவோவென்றால், அதுக்கெதிர்த்தட்டாம்படி, ஸர்வாதிகாரமுமாய், ஸுகரமுமாய், அவிளம்ப்ய பலப்ரதமுமாய், ப்ரமாதஸம்பாவனையுமின்றிக்கே, ஸித்தமுமாய், ஸ்வரூபானுரூபமுமாய், ப்ராப்யத்துக்கு ஸத்ருசமுமாயிருக்கும். ஆனால், இவ்வுபாயம்-வேதாந்தஸித்தமோவன்றோவென்னில், யாஜ்ஞிகீயமான வுபநிஷத்திலே, "ஸத்யம் தபோதமஶ்ஶமோதாநம் யஜ்ஞ: ப்ரஜநநமக்நயோ அக்நிஹோத்ரம் யஜ்ஞோமாநஸம்" என்று, ஒன்

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்.

ப்ர.—ஒன்றுக்கொன்று உத்க்ருஷ்டமாகச் சொல்லிப்போந்து, எல்லாவற்றுக்கும் மேலாக "தஸ்மாந்ந்யாஸமேஷாந்தபஸாமதிரிக்தமாஹு:" என்று, தபஸ்ஸுக்களில்வைத்துக்கொண்டு அதிசிக்தமான தபஸ்ஸு-ப்ரபத்தியென்று, இதனுடைய உத்கர்ஷம்சொல்லித்து. அதுக்குமேலே, "யச் சஜ்ஞஸஸ்ய ப்ரமாணம்வேதாஶ்ச" என்று ப்ரபலப்ரமாணமான ஆசார்யருசிபரிக்ருஹீதத்வமாகிறவேற்றமுமிதுக்குண்டு. "வேதாஶ்ச" என்றுவேதமும்அப்ரதானப்ரமாணமாம்படியிறே வைதிகபரிக்ருஹீதத்வத்தின் ப்ராமாண்யாதிசயமிருப்பது. அளவுடையராயிருப்பார்க்கிதுவேபோருமாய்த்து ப்ராமாண்யத்துக்கு. இதுதான்-அளவில்லாதார்க்குவேதாந்தஸித்தமுமாயிருக்கும். ஆக, இப்படி வேதாந்தஸித்தமுமாய், ஸ்வரூபப்ராப்தமுமாய், ஆசார்யருசிபரிக்ருஹீதமுமாய், சரண்யஹ்ருதயானுஸாரியுமாயிருக்கையாலே, யதிகுலப்யிதுவே யக்ஷ்யமென்னு மிடத்தை, தம்மைவிச்வஸித்திருக்கும் ஸாத்விகர் இழக்கவொண்ணாதென்றுபார்த்து, தாமும், பெரியபெருமாளு மறிந்ததாகவனுஸந்தித்துவிடமமைந்திருக்க, தம்முடைய பரமக்ருபையாலே கத்யமுகேந வெளியிடுகிறார். இதுதான், அவதரித்தபடி யெங்ஙனேயென்னில் ; ஒரு திருவுத்திரத்திருநாளிலே, பெருமாளும் நாச்சியாருமாகப் புறப்பட்டு யேறியருளாநிற்குமளவிலே, எம்பெருமானார் எழுந்தருளி திருவடித்தொழாநின்றார். அஸ்யாமவஸ்தாயாம், திருவுள்ளத்திலே ஸம்ஸாரபீதி நடையாட, திருவடிகளிலே விழுந்து சரணம் புக்கவதுக்குப் பாசுரமிட்டபடி முதலிலே, ஸம்ஸாரபயபீதராய்க்கொண்டு பெரியநம்பி ஸ்ரீபாதத்தை யாஶ்ரயித்தபோதே, பெரிய பெருமாள் திருவடிகளிலே சரணம் புக்கிலரோ. "ஸக்ருதேவ" என்றன்றோ-சரண்யஹ்ருதய மிருப்பது. ஆனபின்பு "தத்தவாஸ்மீதிச ஸம்ஸவேச" என்றும், "உன்னாலல்லால் யாவராலு மொன்றும் குறைவேண்டேன்" என்றும், "களைவாய் துன்பங்களையாதொழிவாய்களை கண்மற்றிலேன்" என்றும், சொல்லுகிறபடியே, உடையவன், உடைமையைச்செய்தபடி செய்கிறானென்று, ஆறியிருக்கப்ராப்தமாயிருக்க; த்திரியிட்டுமிப்போது சரணம்புகவேண்டுவானென் றென்னில் ; அவ்வளவாறியிருக்கமாட்டாத தம் ப்ராப்யத்வரையாலே சரணம் புகுகிறார். இதிறேயாழ்வார்களுக்கும் ரீதி, அவர்களை யடி

ப்ர—யொற்றுகிற வாசாரியர்களுக்கும் அதுவே ரீதியாமத்தனையன்றே. ஸம்ஸாரபயமும், ப்ராப்யருசியும்கனக்கக்கனக்க, ஒருகால் சரணம்புக்காபபோலே யொன்பதின்கால் சரணம்புகுமித்தனையிறே யவர்கள். ஆக, ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வகமாக கைங்கர்யஸித்திக்குப்பெரியபெருமாள் திருவடிகளிலே சரணம் புகுகிறார். இது தான்-த்வயத்துக்கு வ்யாக்யானமாயிருக்கிறது. இதில், முதல் சூர்ணையிலே, சரணம்புகுவார்க்குச் சரணம்புகயோக்யதையுள்ளது, கண்ணழிவற்றவுபேயருசியும், உபாயாத்யவஸாயமு முண்டானாலாகையாலே, தத்ஸித்யர்த்தமாகப் பிராட்டி திருவடிகளிலே சரணம் புகுகிறார். அதுவேன், "ஸகலஃலப்ரதோஹிவிஷ்ணு:" என்று, ஸர்வாபேக்ஷைகளுக்கும் பலப்ரதன்-அவனன்றே, ஆனபின்பு, அந்த யோக்யதாஸித்திக்குமாக, அவன்றிருவடிகளிலே சரணம்புகத் தட்டென்னென்னில்; " ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம் " என்கிறபடியே, ஸர்வபூதஸுஹ்ருத்தாயிருக்கிற வீச்வரனையும், நீரிலே நெருப்புக்கிளருமாப்போலே, "க்ஷிபாமி" "நக்ஷமாமி" என்ன அபராதங்களைப்பண்ணிப்போந்தநாம், நேர்கொடு நேரேநின்று சரணம் புக்கால், பூர்வவ்ருத்தத்துக்கு ஸ்மாரகமாவுதோமென்று, தம்மையஞ்சி, தந்திறத்திலீச்வரனுக்குண்டான சீற்றத்தை யாற்றுமவளுமாய், ஸ்த்ரீத்வப்ரயுக்தமன மார்தவத்தையுடையளுமாய், மாத்ருத்வப்ரயுக்தமான குடல்துடக்கையுடையளுமாய், இவர்கள் சொல்லும் வார்த்தையைச் செவிதாழ்த்துக்கேட்குமவளுமாய், அவனைத்தன்போக்யதையாலே துவக்கிக்கேட்பிக்குமவளுமாய், அதுக்குமேலே, ஸ்வதந்த்ரப்ரஜைக்குத்தாய் சீறுமொதுங்குகை-ப்ராப்தமானவோபாதி, ஸ்வரூபப்ராப்தையுமாயிருக்கையாலே, பிராட்டி திருவடிகளிலே சரணம்புகுகிறார் நெடுங்காலம் விஷயப்ரவணனாய்ப்போந்த ப்ரஜை, நிவ்ருத்தனானவன்றும், பிதாவின்பக்கல் நேர்முகம்பார்த்துச் சொல்லுகையரிதாய், மாதாவின் பக்கல்ச்சொல்லுகை யெளிதாயிருக்குமிறே. ப்ரதமத்திலாச்ரயிக்கைக்குங் கூட விருப்பத்தவிவர், இவளை ஆச்ரயித்தவனந்தரம், பண்ணின வபராதங்களையும் "க்ஷமஸ்வ" என்றாரிறே அந்த:புரபரிகரமாகையாலே.



மூ.—பகவந்நாராயணாபிமதாநுரூப

---

வ்யா.—(பகவன் நாராயண) வ்யா.- பகவச்சப்தத்தாலே, "விநாஹேயைர்குணாதிபி:" என்கிறபடியே, ஹேயஸம்பந்தரஹிதபூர்ணஷாட்குண்யத்தைச் சொல்லுகிறது. "ஜ்ஞாநசக்திபலைச்வர்யவீர்யதேஜாம்ஸ்யசேஷத:-பகவச்சப்தவாச்யாநி விநாஹேயைர்குணாதிபி:" என்னக்கடவதிறே. இத்தால் பயிருக்கு நீர்நிலைபோலே, ஸர்வாத்மாக்களுக்குங்கூட உஜ்ஜீவநஹேதுவான குணபூர்ணனுமாய், பிறருடையதோஷம் தட்டாதபடியான ஹேயராஹித்யத்தையு முடையவனென்கிறது. (நாராயண) பகவச்சப்தத்திலே ஸர்வமுமில்லையோ; இனி நாராயணசப்தாபேக்ஷை யுண்டோவென்னில்; "அந்யத்ர ஹ்யுபசாரத:" என்கிறபடியே, பகவச்சப்தத்துக்கும், ப்ரஹ்மசப்தத்தோபாதி, வ்யக்த்யந்தரங்களிலே யௌபசாரிகமாகவாகிலும்ப்ரயோகமுண்டு, அதுவுமின்றியே, யநந்யபரமான நாராயணாநுவாகஸித்தமாய், யோகரூடியாலே, நாராயணபதம்-ஸர்வேச்வரனுக்கேவாசகமாயிருக்கும்; அத்தாலே விசேஷிக்கிறது. ஆக, பகவன் நாராயண என்று, ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், உபயவிபூதிநாதனான ஸர்வேச்வரனைச் சொல்லித்தாய்த்து. பிராட்டி திருவடிகளிலேசரணம்புகுகிறாராகில், இவ்விடத்தில் இது சொல்லவேண்டுவா னென்னென்னில்; ஆற்றுக்கு ஸஹ்யம்போலேயும், விளைநிலத்துக்கேரிக்கட்டுபோலேயும், இவளுடையகுணங்களுக்கடியான கல்யாணகுணயோகத்தையும், இவளுடைய விபூதிக்கடியான வுபயவிபூதியோகத்தையும் சொல்லுகிறது. அவனைச்சொல்லும்போது, ஸ்ரீமானென்ன வேண்டினவோபாதி, இவளைச்சொல்லும்போதும், "விஷ்ணுபத்நீ" என்னவேண்டியிறேயிருப்பது. நிரூபகத்தையொழிய நிரூப்யத்துக்கு ஸ்திதி யில்லாதவோபாதி, நிரூப்யத்தையொழிய நிரூபகத்துக்கும் ஸ்திதியில்லையே. (அபிமத) எவம் விதனாயிருந்துள்ளவனுக்கு அபிமதமாயிருக்கை. (அநுரூப) ராஜாக்கள் நீவஸ்த்ரீகால்க்கடையிலே துவளுமாப்போலே, யபிமதமேயாகிலு மனனுரூபமாயிருப்பனவுண்டு; அங்கனன்றிக்கே, "உனக்கேற்கும்" என்னும்படியே யனுரூபமாயிருக்கை. இப்படியபிமதமாய், அனுரூபமாயிருக்கிறவை யெவையென்னில்; (ஸ்வரூபரூபகுணவிபவைச்வர்யசீலாதிகள்) அவனுக்கு, இவள் ஸ்வரூபம் - அபிமதமாயிருக்கையாவது - இவள் ஸ்வரூபம்-அவன்.

[illegible]

வ்யா.—ஸ்வரூபத்துக்கு தாரகமாயிருக்கை. ராவணன், மாயா சிரஸ்ஸைக்காட்டினபோதும், இந்த்ரஜித்து, மாயாஸீதையைக்காட்டினபோதும், இருவரும்மெய்யென்று ப்ரமிக்கச் செய்தேயந்யோந்யம் தரித்துக்கிடந்தவிடம்- ஸ்வரூபஸத்தையாலேயிறே. அவன் ஸ்வரூபமிவளுக்கு தாரகமாகிறது - ஸ்வரூபதஃ;இவள் ஸ்வரூபமவனுக்குதாரகமாகிறது, அபிமதத்வத்தாலே. அநுரூபமாகையாவது-"[illegible]" என்றும், த்வயாவிஷ்ணு-[illegible]" என்றும், "யுக்தா[illegible]" என்றும், "தவைவோஷிதயா" என்றும்,சொல்லுகிறபடியே,இவளுடையஸ்வரூபம்-அவனோடொக்கச்சொல்லலாம்படியிருக்கை. (ரூப) ரூபமாவதுவிக்ரஹம்.ஸ்வரூபத்தைச்சொன்னவநந்தரம், ஸ்வரூபகுணங்களைச் சொல்ல ப்ராப்தமாயிருக்க, விக்ரஹத்தைச் சொல்லுகைத்து, ஸ்வரூபத்துக்கும்,ஸ்வரூபாச்ரிதமான குணங்களுக்கும் ப்ரகாசகமாகையாலே. ஸ்வரூப மபிமதமாகாநின்றால், ரூபம்-அபிமதமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. அதுதான் - ஸ்வரூபாச்ரிதமென்றிறே யபிமதமாயித்து. ரூப மபிமதமாகையாவது - "அகலகில்லேனிறையும்" என்று, அவள் துணுக்குத்துணுக்கென்னும்படியான வவன்றானும் மேல்விழும்படியாயிருக்கை. "மெல்லியல்தோள் தோய்ந்தாய்" "மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்" என்று, அவனுக்கு "உண்ணும்சோறு பருகுநீரும்" இவள் வடிவேயாயிறே யிருப்பது. இது-அநுரூபமாகையாவது - சீலத்தாலும் வ்ருத்தத்தாலும் துல்யமாயிருக்கை. (குண) ரூபானந்தரபாவித்வத்தாலே, யிதுதான் - ஸௌந்தர்யாதிகளாகக் கடவது. இவையும், ரூபத்துக்கு நிறங்கொடுத்து, போகவர்த்தகங்களுமா யிருக்கையாலே, யபிமதமாயிருக்கும் அத்தனைவ அநுரூபமுமாயிருக்கும்.(விபவ)"[illegible]" என்று.அர்த்தாம்சம் அவனதாய், சப்தாம்சமிவளதாயிருக்கை. "[illegible]" "ஸ்த்ரீநாம[illegible]" என்னும்படி,பும்லிங்கபதார்த்தங்களவனதாய், ஸ்த்ரீலிங்கபதார்த்தங்களிவளதாயிருக்கை. "ஸர்வாநுபோமாநு[illegible]" என்று,ஸர்வபோகங்களையும்விட்டுக் காட்டேறப்புறப்பட்டாளென்கையாலே,லீலோபகரணங்களும்,போகோபகரணங்களும், அவன் விபூதியிலும் விஞ்சியிருக்கை. அவையாவன "முற்றிலும்பைங்கிளியும் பந்துமூசலும் பேசுகின்ற சிற்றில்மென்

மூ.—ஶ்ரிய-ஸஹிதா சிந்த்யா நவதிகாதிஶய அஸங்க்யேய கல்யாண

வ்யா.—பூவையும்விட்டகன்ற செழுங்கோதை" என்றும், "பூவைபைங்கிளிகள் பந்துதூதைபூம்புட்டில்கள்" என்றும், ஸ்ரக்சந்தநாதிகளும். இவைதான்-ஸாமாந்யமாயும், அந்தஃபுரபரிகரமாயுமிருக்கும். அங்கனன்றியே,"யோயோ ஜகதிபும்பாவம்" "சேஷித்வேபரமஃபுமான்" என்னும்படியே,ஸவிபூதிகனான ஈச்வரனென்றுமாம். இது - அவனுக்கு அபிமதமாகிறதும், அந்தஃபுரபரிக்ரமாகையாலே. (ஐச்வர்ய) அதாவது - ஸகலபதார்த்த நியமனஸாமர்த்யம். த்ரிவிதசேதநரையும், ஸ்வரூபேண நியமிக்கும்; ஈச்வரனை ப்ரணயித்வத்தாலே நியமிக்கும். நியமிக்கும் ப்ரகாரமென்னென்னில்; பத்தரை,க்கர்மானுகுணமாக நியமிக்கும். நித்யமுக்தரை, ஸ்வரூபானுரூபமாக நியமிக்கும், ஈச்வரனை, ரக்ஷணானுகுணமாக நியமிக்கும். இதுதான் - அபிமதமாகிறதும், புருஷோத்தமத்வ ஸூசகமாகையாலே. ப்ரணயினியினுடைய நியமனம் - ப்ரணயிக்கு பும்ஸ்த்வாவஹமாயிருக்குமிறே. இது - ஜ்ஞாநாதிகுணங்களுக்கு முபலக்ஷணம். (சீல) சீலம், ராக்ஷஸிகள் பக்கல்ப்ரஸித்தம். ராவணனைக்குறித்து, "மித்ரமௌபயிகம்கர்த்தும்" என்றும், "விதித்ஸஹி தர்மஜ்ஞ:" என்றும், ராக்ஷஸிகளைக்குறித்து, "ஸ்வேயம்ஶரணம்ஹிவ:" என்றும் "ராஜஸம்ஶ்ரயவஶ்யாநாம்" என்றும், "பாபாநாம்வாஶுபாநாம்வா" என்றும்,திருவடியோடே மறுதலைத்து ரக்ஷித்தாளிறே. இக்குணங்களபிமதமாகிறது - தனக்குஸ்வரூபமான ரக்ஷணத்துக்குபயோகியாகையாலே.(ஆதி)சப்தத்தாலே,அனுக்தமான குணவிசேஷங்களை நினைக்கிறது. ஸமஸ்தகல்யாண குணாத்மகனைப் பேசினு மிவளைப்பேசிமுடியாதென்கை. (சுநவதிகாதிசய)இவைதான்ஒரொன்றேயபரிச்சேத்யமாயிருக்கும் (அஸம்க்யேய) எண்ணிறந்திருக்கை (கல்யாண)"ஐயம்துஸவதோஷாரியாக்ஷோஷைரெதைவிவர்ஜிதா" என்கிறபடியே,உள்ளதெல்லா மழகிதாயிருக்கை. இவள் குணங்களுக்கு வ்யாவர்த்தகமவன் குணங்கள். அவன் குணங்களுக்கு தோஷமேதென்னில்; அவனுக்குஸ்வரூபானுபந்தியான நிரங்குசஸ்வாதந்த்ர்யமுண்டு. "கோபமாஹாரயத்" என்று, கோபத்தையருளப்பாடிட்டு கார்யம் கொள்ளவேண்டும் தசையுண்டு. அதுதானுமிவளுக்கின்றிக்கே யிருக்கை.

மூ.—ஜணகணாம், பத்மவநாலயாம், பகவதீம்,
ஸ்ரியம்,தேவீம்,நித்யாநபாயிநீம்,நிரவத்யாம்,
தேவதேவ திவ்யமஹிஷீம், அகிலஜகந்மாதரம்,

வ்யா.—(குணகணாம்,) இவைதான்-திரள்திரளாயிருக்கை. (பத்மவநாலயாம்,) பத்மசப்தம், மங்களங்களுக்குபலக்ஷணமாய்,ஸர்வ மங்களநிவாஸிநீ என்கை, அங்ஙனன்றியே, "ஸௌகந்த்ய:" என்கிற வஸ்துவையும், ஸவஸம்பந்தத்தாலே பரிமளிதமாக்குகை யென்று மாம்.பத்மசப்தத்தாலேபோக்யதையைச் சொல்லித்தாய், அத்தாலே நிரதிசயபோக்யையென்றுமாம். பரிமளமிறே-யிவள்வடிவுக்கு பாதானம். "ஸர்வகந்த ஸர்வரஸ:" என்னுமிவை யிரண்டும், இத்தலையிலே கிடந்தபடி. (பகவதீம்) பகவச்சப்தம் பூஜ்யவாசி "தஸ்ய ப்ரஜ்ஞவஞாகேஸாகதிஷரிஸாஷாஸநவிதை: சப்தோயம்நோப சாரேண" என்கிறவனுக்கும் பூஜ்யையாயிருக்கை. ஆக விவையிரண்டாலும், தன்வழியாக வவனைப்பற்றினால்குற்றம் பாராதபடி, யவனைத்தன் போக்யதையாலே துவக்கிப்பொறுப்பிக்கு மவளென்கை. (ச்ரியம், ) தன்னைப்பற்றி ஸர்வருமுண்டாம்படியாய், தானவனைப்பற்றி யுளளுமாயிருக்கை. இதிலே நிருக்திப்ரக்ரியையும் நடக்கக்கடவது. ( தேவீம், ) வடிவில்ப்புகரிருக்கிறபடி. அவனோட்டைச் சேர்த்தியாலேத் யோதமானையாயிருக்கிறவளே. (நித்யாநபாயிநீம்,) " விஷ்ணோஸ்ஸ்ரீரநபாயிநீ" என்கிறபடியே, யவனோடுண்டான நித்யஸம்ச்லேஷத்தாலே யபாயமின்றியே யிருக்கை. அபாயோவிச்லேஷ:. ( நிரவத்யாம், ) கீழ்ச்சொன்னவேற்றமெல்லாம் ஸ்வார்த்தமாயிராதே,அத்தலைக்கேயாம்படியிருக்கை. ஏதேனுமொன்று மெனக்கென்கை - அவத்யம் ; பிறர்க்கென்கை-நிரவத்யம் இனிவிஷயவிபாகமேயுள்ளது. அது வகுத்தவிஷயமாமித்தனையே வேண்டுவது. அவன்றானும், தன்னையும் தன்னுடைமையையும் "ஸக்தாநாம்" என்றிறேயிருப்பது. ( தேவதேவதிவ்யமஹிஷீம், ) ஸர்வேச்வர ஸாம்ராஜ்யத்திலே, * தேவர்க்கும் தேவனானவனோடொக்க வபிஷிக்தையானவள். "க்ருதாபிஷேகா மஹிஷீ." ( அகில ஜகன்மாதரம்,) இப்பெரியமேன்மையைக்கண்டிருக்கவேண்டாதபடி, ஸகலசேதனரோடுண்டான அவிநாபூதமான குடல் த்துடக்கைச்சொல்லுகிறது. ஸார்வபௌமன்மஹிஷீ, தன்ப்ரஜை, சேற்றையளைந்து மடியிலேயேறப்புக்கால், அணைத்து

மூ.—அகிலஜகந்மாதரம், அஸ்மந்மாதரம், அநந்யஶரண:
ஶரணமஹம் ப்ரபத்யே॥-உ-

வ்யா.—உச்சிமுகக்குமித்தனையிறே ப்ரஜையின் பக்கல் ப்ரா ப்தியேயிறே ஜீவிப்பது. அகிலசப்தத்தில், தாமுமந்தர் பூதராகை யாலே, தம்மையுங்கூட்டிக்கொள்ளுகிறார் (அஸ்மன்மாதரம்,) என் று. (அசரண்யசரண்யாம்,) குணலேசமாத்ரத்தாலே குற்றங்களைய டைய பொறுத்துகக்குமவள். அங்ஙனன்றிக்கே, "தேநமௌலீந்த்ர ஸுதம்" என்று குற்றத்தோடேயுகக்குமவள் புறம்பு புகலற்றா ர்க்கு, ஸர்வேஶ்வரவிஷயம் - புகலாயிருக்கும், ஸர்வேஶ்வரவிஷயத்துக்கும் புறம்பாயிருப்பார்க்கும் புகலாயிருக்குமிவள் "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்னுமவர், சிறிக்கைட்டும் விலலுமானவன் றும், இவள் திருவடிகளே புகலாயிருக்கும். "ஸர்வலோக சரண் யர்என்று காளமூதித்திரிகிறவர் - அசரண்யரானவன்றும், இவள் - சரண்யையாயிருக்கும். சரணம் என்கிற உக்தியைப்பத்தி சரண்யர் அவர். ஸம்பந்தமே ஹேதுவாக சரண்யையாயிருக்கு மிவள். "ஸவிதா ராவணேநோக்த:" "தௌவயிகம் கர்ம" விதிதஸ்ய ஹிமஸ்ஜ்ஞ: " ராஜஸம்ஶ்ரயவஶ்யா நாம" வாவாநாம்வாஸ: ஸாநாம்வா" கநாமேவாநிதவிஶேஷாமேஷேவோக ஶரண்ய" எ ன்கிறபடியே, ஸர்வஸமாச்ரயணீயமான ஸர்வேஶ்வரவிஷயத்துக்குப் புறம்பாயிருப்பாருமுண்டோவென்னில்; ( அநந்யசரணோஹம் ) அந்தவனன்யசரணனாகிறான் - நானென்கிறார். (சரணம்ப்ரபத்யே.) அசரண்யர்க்கும் சரண்யரான தேவர் திருவடிகளையே - யுபாய மாக வ்யவஸிக்கிறேன். அசரண்யர்க்கும் சரண்யையாவ தென் னென்னில் ; அகிலஜகந்மாதாவாகையாலே, அபேக்ஷா நிரபேக்ஷ மாகப்பரிக்ரஹிக்கும் தேவர்க்கும், பரிக்ரஹித்தல்லது நிற்க வொண்ணாதபடியான வபேக்ஷையையும் பண்ணினேன். "தாம் வநேமீம் ஶரணமஹம் ப்ரபத்யே" (பாரமார்த்திக ) கீழ், பி ராட்டியுடைய சரண்யதையையும், அதுக்கடியான ஊற்றுவாயை யும், தம்முடைய வனன்யகதித்வத்தையும், சொல்லி, அவள் திரு வடிகளிலே சரணம் புக்குநின்றார். அனந்தரம், உமக்கபேக்ஷித மென்னென்று பிராட்டி திருவுள்ளமாக ; கைங்கர்யருசியும், ப்ர பத்திநிஷ்டையு மெனக்குண்டாகவேணுமென்கிறார். ஈச்வரன்திரு வடிகளிலே, கைங்கர்யஸித்திக்கிறே சரணம்புகுவது; அவ்வளவன்

மூ.—பகவச்சரணாரவிந்தயுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞான பரமபக்திக்ருத பரிபூர்ணாநவரத

வ்யா.—நிக்கே, ருசி விச்வாஸங்களென்று, தனித்தனியே யபேக்ஷித்துப்பெறவேண்டுவன-சிலவதிகாரி விசேஷணங்களுண்டிறே. இப்போது அபேக்ஷித்துப்பெறவேண்டும்படி, இதுக்குமுன் பிவர்க்கு இன்றிக்கேயிருந்ததோவென்னில்; உண்டானாலும், தந்தாமுக்கொன்றுமில்லையாகவிறே தந்தாமைநினைத்திருப்பது.உ (பாரமார்த்திக) அர்த்தம் என்று,ப்ரயோஜனத்துக்கும் மெய்க்கும் பெயர். இது-பரமபக்திக்கு விசேஷணமானபோது, அதினுடைய வக்ஷத்ரமத்வம் சொல்லுகிறது; திருவடிகளுக்கு விசேஷணமான போது, அதினுடைய பரமப்ரயோஜனத்வம் சொல்லுகிறது. இப்பிரிவுக்கு ப்ரயோஜனமென்னென்னில்; பக்தி விஷயமானபோது, திருவடிகள் - பரமப்ரயோஜனமாகக்கடவது ; திருவடிகள் விஷயமானபொது, பக்தி - அக்ருத்ரிமையாகக்கடவது. ( பகவச்சரணாரவிந்த ) கீழ்ச்சொன்ன பகவத்சப்தம் - ஸர்வோத்கர்ஷவாசி. இது, குணயோகத்தால் வந்த ரஸ்யதையைச்சொல்லுகிறது. குணங்களும் - போக்யமாயிருக்கையாலே, பரமபக்திஜனகம். ( சரணாரவிந்த ) விக்ரஹவத்தையால் வந்த போக்யதைசொல்லுகிறது. ( யுகள ) சேர்த்தியால்வந்த போக்யதை. (ஐகாந்திக) ஏகமே அந்தமாயிருக்கை. அதாவது - வேறொரு விஷயத்தையுடைத்தன்றிக்கே யிருக்கை. ( ஆத்யந்திக ) அந்தத்தை யதிக்ரமித்திருக்கை. அதாவது - நித்யமாயிருக்கை. (பரபக்திபரஜ்ஞான பரமபக்தி ) பரபக்தியாவது - ஸம்ச்லேஷ விச்லேஷஸுகதுஃகாம்படியான ப்ரேமவிசேஷம். பரஜ்ஞானமாவது - இதினுடைய விபாகதசையான ஸாக்ஷாத்காறம். பரமபக்தியாவது - க்ஷணகாலமும் விச்லேஷித்தைப்பொறுக்கமாட்டாத தசை. "உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய" என்கிறபடியே, ஜ்ஞானகர்மங்களாலே ஸம்ஸ்க்ருதாந்தஃகரணனுய், பக்தி பிறந்து, அதினுடைய விபாகதசை - பரமபக்தியாவது உபாஸகனுக்கு. இவர்க்கந்தஸ்தானத்திலே பகவதனுக்ரஹம்நிற்க, மேலுள்ள தசைகளை யபேக்ஷிக்கிறார். (க்ருத) இவற்றாலே பண்ணப்பட்ட. ( பரிபூர்ண) பரிபூர்ணமாகையாவது-ஸ்வரூபரூபகுணவிபூதிகளித்தனையும் ஒருக்காலே யனுபவவிஷயமாகை. ( அனவரத ) அவிச்சின்னமாயிருக்கை. அதாவது -

மூ — நித்ய விஶததம அநந்ய ப்ரயோஜந அநவதிகாதிஶ
யப்ரிய பகவதநுபவ ஜநித அநவதிகாதிஶய ப்ரீ
திகாரித அஶேஷாவஸ்தோசித அஶேஷ ஶேஷதைக
ரதிரூப நித்யகைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா,
பாரமார்த்திகீ பகவச்சரணாரவிந்த ஶரணாகதி:
யதாவஸ்திதா அவிரதாஸ்து மே - ௫ - அஸ்து தே ||

வ்யா.—கைவிடாதேசெல்லுகை. (நித்ய) யாவதாத்மபாவியாயிருக்கை. (விசததம) விசதமாவது-பரபக்திதசையி லனுபவம். விசததரமாவது - பரஜ்ஞானதசையிலனுபவம். விசததமமாவது பரமபக்திதசையிலனுபவம். (அனன்யப்ரயோஜன) அனுபவஜனிதப்ரீதியும், ப்ரீதிகாரித கைங்கர்யமும்வேண்டாதே, இதுதானேயமையுமென்னும்படி யிருக்கை. (அனவதிகாதிசயப்ரிய) அனவதிகமான வதிசயத்தையுடைத்தான ப்ரீதி. (பகவதனுபவ) சரீராவஸானஸமனந்தரமாக அர்ச்சிராதிகதியாலேபோய், பரமபதத்திலனுபவிக்குமனுபவம். (ஜனிதான வதிகாதிசயப்ரீதிகாரித) அத்தால் பிறந்தப்ரீதியாலே பண்ணிவிக்கப்பட்ட. ‡ (அசேஷாவஸ்தோசித) ஸர்வாவஸ்தைகளிலு மனுகூலமாயிருக்கை. (அசேஷசேஷதைகரதிரூப) "நிவாஸஶய்யா" த்யாதிப்படியே, ஸர்வவிதசேஷதையிலு முண்டான வபிநிவேசத்தையே வடிவாகவுடைத்தாயிருக்கை. (நித்ய) அபுனராவ்ருத்திலக்ஷணமாயிருக்கை. (கைங்கர்யப்ராப்த்யபேக்ஷயா,) கைங்கர்யப்ராப்தியி லுண்டான வபேக்ஷையாலே. (பாரமார்த்திகீ) ஆர்த்தருடையாயிருக்கை (பகவத்) ஜ்ஞானசக்த்யாதிகளால் பூர்ணவிஷயமாகையாலே ஸஹாயாந்தரநிரபேக்ஷமான வுபாய பௌஷ்கல்யம் சொல்லுகிறது. (சரணாரவிந்த) விக்ரஹத்திலுடைய பரமோபாயத்வம் சொல்லுகிறது. (சரணாகதி:) ஸ்லக்ஷணமாயிருக்கை. (யதாவஸ்திதா) உபாயாந்தரங்களினுடைய வனுபாயத்வபுத்திபூர்வகமாக அத்தைப்பற்றுகை-போலேகாணும், யதாவஸ்திதா என்றது. இருந்தபடியேயென்றபடி. ரஹஸ்யமாகையாலே, நேராகவெளியிடாதொழிகிறார்.(அவிரதாஸ்துமே.) அனன்யகதியா யிருந்துள்ள வெனக்கு, யாவத்ப்ராப்தி விச்சேதமின்றிக்கே யொழியவேணும்.-௫-(அஸ்துதே.) பிராட்டி யருளிச்செய்கிறாள்-உமக்கப்படியே யுண்டாயிடுக.

‡ ஸ்வார்த்தணி ஜஜொவா

மூ.—ச-தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே || ரு-அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாந, ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷண, அநந்த, ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப,

வ்யா.—ச||(தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே.) அப்படிப்பட்ட வுபாயந்தன்னாலேயே, பரபக்தி தொடக்கமாக, கைங்கர்ய மீறாக, நடுவுள்ளதசைகளடைய வுண்டாகக்கடவது. ( அகிலேதி ) மே, லாச்ரயணீயவஸ்து நிர்தேசம்பண்ணுகிறார். ஆச்ரயணீயனானவன் - நாராயணனிறே. அதில், நாரசப்தார்த்தம் மேல்சொல்லுவதாகக் கோலி, அதுக்காச்ரயமாய், அயன சப்தார்த்தமான திவ்யாத்மஸ்வரூபத்தைமுதலிலே யருளிச்செய்கிறார். ரு-(அகிலஹேயப்ரத்யநீக ) நிர்க்குணமென்கிற வஸ்து - இருக்கிறபடி. ஹேயங்களாவன - அசித்கதமான பரிணாமமும், சேதனகதமான துஃகாஜ்ஞாநாதிகளும், நித்யமுக்தர் பக்கலுண்டான பாரதந்த்ர்யமும். அகிலசப்தத்தாலே, உபயவிபூதியிலு முண்டான சேதநாசேதனங்களைச்சொல்லுகிறது. பாரதந்த்ர்யம் - ஹேயமாமோவென்னில் ; புருஷனுக்கு ஸ்தனோத்பேதமும், ஸ்த்ரீக்கு ச்மச்ருஸம்யோகமும்போலே, பரதந்த்ரனுக்கு ஸ்வாதந்த்ர்யம் - ஹேயம் அப்படியே, ஸ்வதந்த்ரனான ஈச்வரனுக்கு பாரதந்த்ர்யம்-ஹேயமாகக்கடவது. ப்ரத்யநீகத்வமாவது - பதார்த்தாந்தர ஸம்ஸர்காபாவாதாரத்வம். ஆச்ரிதருடைய ஹேயநிரஸநத்துக்கடியான ஹேயப்ரத்ய நீகத்வமென்றுமாம். (கல்யாணைகதான,) கல்யாணைகவிஸ்தார. அகண்டைகரஸம்போலே யிச்சப்தம். ( ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷண, ) அதனவ ஸமஸ்தவஸ்து விலக்ஷண. ( அனந்த, ) த்ரிவிதபரிச்சேதராஹித. விபுத்வாத்தேசபரிச்சேதராஹித்யம். நித்யத்வாத்கால பரிச்சேதராஹித்யம். ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தவஸ்துக்களுக்கும், தான் - ப்ரகாரியாய், தனக்கு ப்ரகார்யந்தரமில்லாதபடி நிற்கையாலே, ஸத்ருசவஸ்த்வபாவத்தாலே வஸ்து பரிச்சேதராஹித்யம் துலையாலேயாதல், ப்ரஸ்தாதிகளாலே யாதல் வரும் பரிச்சேதராஹித்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். ( ஜ்ஞானாநந்தை கஸ்வரூப,) அதாவது - ஸ்வயம் ப்ரகாசத்வ ஸுகரூபத்வங்களே ஸ்வரூபமா யிருக்கை. இப்படி திவ்யாத்மஸ்வரூபம் சொல்லப்பட்டது. அனந்தரம், நாரசப்தவாச்யங்களில், ஸ்வரூபகுணங்களுக்கு ப்ரகாசகமாய், பஞ்சோபநிஷன்ம

ரு — ஸ்வாபிமதாநுரூபைகரூபாசிந்த்யதிவ்யாத்புதநித்ய
நிரவத்யநிரதிசயௌஜ்ஜ்வல்யஸௌந்தர்யஸௌகந்த்யஸௌகு
மார்யலாவண்ய யௌவநாத்யநந்தகுணநிதிதிவ்யரூப,

---

வ்ர — யமான திவ்யவிக்ரஹத்தை யருளிச்செய்கிறார். (ஸ்வாபிமத) கீழ்ச்சொன்ன ஸ்வரூபத்துக்கு, குணங்களில்க்காட்டில் ப்ரகாசகமுமாய், விலக்ஷணமுமாய், அந்தரங்கமுமாயிருக்கையாலே, குணங்களுக்கு முன்னே விக்ரஹத்தையருளிச்செய்கிறார். (ஸ்வாபிமத) "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" என்கிறபடியே, திவ்யாத்மஸ்வரூபத்தில்க் காட்டில் அபிமதமாயிருக்கை. (அநுரூப) ஸ்வரூபத்துக்கு திரோதாயகமாயிருக்கை யன்றிக்கே, ஸ்வரூபானுபவத்துக்கு வர்த்தகமாயிருக்கை. (ஏகரூப) ஷட்பாவவிகாரரஹிதமாயிருக்கை. "ஸதைகரூபரூபாய" என்றிருக்கை. அதவா (அசிந்த்ய) இதரஸஜாதீயதயாசிந்தயிதுமசக்யமாயிருக்கை. (திவ்ய) வருந்தியுமுபமான மின்றிக்கேயிருக்கை. அப்ராக்ருதமா யிருக்கையென்றுமாம். அதாவது - க்ஷணந்தோறுமபூர்வமாயிருக்கை. (அத்புத) ஆச்சர்யாவஹமாயிருக்கை. (நித்யநிரவத்ய) நித்யநிர்தோஷமாயிருக்கை. அதாவது - என்றும் மொக்கஸ்வார்த்தமா யிராதொழிகை. "ஸகதாநம்" என்றிருக்குமிருப்பு. (நிரதிசயௌஜ்வல்ய) ஸர்வதேஜஸ்ஸுக்களையும் கீழ்படுத்திக்கொண்டிருக்கு மௌஜ்வல்யம். இத்தால், ப்ரஹ்மாதிகளுக்கு மமைத்துக்காட்டவேண்டும்படியா யிருக்கை. இத்தால், விக்ரஹவைலக்ஷண்யம் சொல்லித்து. அத விக்ரஹகுணா:. (ஸௌந்தர்ய) அவயவசோபை. (ஸௌகந்த்ய) "ஸர்வகந்த:" என்கிறபடியே, ஸர்வத்தையும் பரிமளிதமாக்கவற்றாயிருக்கை. (ஸௌகுமார்ய) நாய்ச்சிமாருமுறைக்கப் பார்க்கப்பொறுபடி புஷ்பஹாஸஸுகுமாரமாயிருக்கை. (லாவண்ய) ஸமுதாயசோபை. அதாவது - எங்கு மொக்கவ்யாபித்துநின்று, ரஸத்தைத்தரவற்றாயிருக்கை. (யௌவன) "யுவாகுமார:" என்கிறபடியே, நித்யயுவாவாயிருக்கும்பருவம். (ஆதி) இவைதுடக்கமான. (அனந்தகுணநிதி) அஸங்க்யாதமான குணங்களுக்குக் கொள்கலமாயிருக்கும். (திவ்யரூப,) திவிஸ்திதரூப. அதாவது - இவ்விபூதியிலடங்காதிருக்கை. விக்ரஹகுணங்கள் — விக்ரஹத்துக்கு பூஷணமாயிருக்குமாப்போலே, திவ்யாத்மஸ்வரூபத்துக்கு பூஷணமான

மூ.—ஸ்வாபாவிகாநவதிகாதிசயஜ்ஞாந பலைச்வ
ர்ய வீர்ய சக்தி தேஜ ஸௌசீல்ய வாத்ஸல்ய மா
ர்த்தவார்ஜவ ஸௌஹார்த்த ஸாம்ய காருண்ய

வ்யா.—ஸ்வரூபகுணங்களைச் சொல்லுகிறது. $ (ஸ்வாபாவிக) ஜலத்துக்கு சைத்யம்போலே, ஸ்வபாவஸித்தமாயிருக்கை. (அநவதிகாதிசய) நிரவதிகமுமாய், ஆச்சர்யகரமுமாயிருக்கை. ப்ரதமத்தில், ஜ்ஞாநாதிளாறும்-ஸர்வவிஷயங்கள். அவற்றில் (ஜ்ஞான) "யோ வேத்தியுகபத்ஸர்வம்" என்கிறபடியே, யெல்லாவற்றையு மொருக்காலே யெப்போது முள்ளபடி யறியவற்றாயிருக்கை. (பல) ஸங்கல்பமாத்ரத்தாலே, ஸர்வபதார்த்தங்களையும் தரிக்கும்தாரண ஸாமர்த்யம். (ஐச்வர்ய) ஸமஸ்தபதார்த்த நியமனஸாமர்த்யம். (வீர்ய) ஸர்வத்தையும் தரித்து நியமித்துப்போரா நின்றால், புருஷம் வேராதவனுயாஸம். யெல்லாவற்றையு முண்டாக்காநின்றால், தான் - அவிக்ருதனுயிருக்கும் அவிகாரதையென்னவுமாம். ஜகது பாதானசக்தி யென்னவுமாம். (சக்தி) ப்ரவ்ருத்யுன் முகரானசேதனர்க்கு சக்தியைக்கொடுத்து, ப்ரவர்த்திப்பிக்கும் ப்ரவர்த்தகத்வஸாமர்த்யம். அகடிதகடன ஸாமர்த்யம் என்னவுமாம். ஜகது பாதானசக்தி என்னவுமாம் (தேஜஃ) பராபிபவன ஸாமர்த்யம். "தமேவஹாஸநாஸாதிஸவம்".இப்படி ஸர்வோத்க்ருஷ்டனானவனுக்கு, இனி,பன்னிரண்டுகுணம் - ஆச்ரிதவிஷயம். (ஸௌசீல்ய) மஹதோமந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ஸ்லேஷஸ்வபாவத்வம்-ஶீலம். அது - தன்திருவுள்ளத்தில்ப் படாதொழிகை-ஸௌசீல்யம். "குத்மாநஜாநஷ்ஸமநே" என்னுமாப்போலே. (வாத்ஸல்ய) தன்ப்ரேமத்தாலே யாச்ரிதகதமானதோஷமும் - குணமாய்த்தோற்றுகை. "தோஷோயத்யபிதஸ்யஸ்யாத்" (மார்தவ) ஆச்ரிதவிச்லேஷம் பொறுக்கமாட்டாத தன் திருவுள்ளத்தில் மென்மை. "அதிப்ரவாஸதஸ்ஸ" (ஆர்ஜவ) ஆச்ரிதஸம்ச்லேஷத்தில், தன்னுடைய மநோவாக்காயங்கள் - ஏகரூபமாயிருக்கை. அதாவது - அவர்களுக்குத் தன்னை நியமித்துக்கொடுக்கை. (ஸௌஹார்த) ஆச்ரிதர்க்கு ஸர்வமங்களான்வேஷணபரனாகை; "ஸோஹநா ம்ஸவீதிவாஹ்யாத்". (ஸாம்ய) ஜாதிகுணவ்ருத்தாதிகளைப் பாராதே, அவர்களுக் காச்ரயணீயத்வத்தில் ஸமனாயிருக்கை. "ஸஹோத ஸ்ஸுக" "ப்ரவாஸ்ராஸநீதஃ". (காருண்ய)ஸ்வார்த்தநிரபேக்ஷ

மூ.—மாதுர்ய காம்பீர்ய ஔதார்ய சாதுர்ய ஸ்தைர்ய தைர்ய சௌர்ய பராக்ரம, ஸத்யகாம, ஸத்யஸங்கல்ப,

---

வ்யா.—[illegible] "[illegible]". (மாதுர்ய) [illegible] "[illegible]" [illegible]. "[illegible]" "[illegible]" (காம்பீர்ய) ஆச்ரிதர்க்குச் செய்யநினைத்திருக்குமவை-ஒருவராலும் பரிச்சேதிக்கவரிதாயிருக்கை. அதாவது-தன்கொடையின் சீர்மையையும், கொள்ளுகிறவனுடைய சிறுமையையும், பாராதிருக்கை; "[illegible]" (ஔதார்ய) ஆச்ரிதருடைய வபேக்ஷிதங்களை, த்தானேயிரந்துகொடுக்கை; "[illegible]" [illegible]". (சாதுர்ய) ஆச்ரிததோஷங்களை, ப்பிராட்டியு மறியாதபடி மறைத்துக்கொண்டிருக்கை. ஆச்ரிதருடைய வதிசங்கையைப்போக்கிரக்ஷிக்கை யென்னவுமாம். "[illegible]". (ஸ்தைர்ய) "[illegible]". "[illegible]". (தைர்ய) அதுக்கடியான நெஞ்சில்த் திண்ணிமை. அனந்தரமிரண்டு குணம் - ப்ரதிபக்ஷ விஷயம். (சௌர்ய) ஆச்ரிதவிரோதிகளை யழியச்செய்ய வல்லனாயிருக்கை. (பராகரம,) அளவறமுடுகினாலும், வினைசெய்யவல்லனா யிருக்கை. [illegible] (தைர்ய) [illegible]. (சௌர்ய) அவ்வளவன்றிக்கே, [illegible]. (பராக்ரம,) [illegible]" [illegible]". (ஸத்யகாம,) [illegible]. காமம் என்றது-காமிக்கப்படும் விஷயத்தை [illegible] கல்யாண குணங்களையும், விபூதியையும் சொல்லுகிறது. ஆச்ரிதர்க்கனுபாவ்யமான குணவிபூதிகளென்கை. (ஸத்யஸங்கல்ப,) அமோகமானவபூர்வபோக்யங்களை ஸ்ருஷ்டிக்க க்ஷமனாகை. [illegible] - காம:. [illegible]. [illegible] - ஸங்கல்ப: [illegible]. இக்குணங்களிரண்டும் - ஜகத்ஸருஷ்டிக் குறு

மூ.—க்ருதிஸ க்ருதஜ்ஞ ஸ்வாபாவிக கல்யாண
குணகணௌக மஹார்ணவ, ஸ்வோசித வி
விதவிசித்ராநந்தாச்சர்ய நித்ய நிரவத்ய

வ்யா —ப்பாகையாலே, உக்தார்த்தஸமர்த்தநார்த்தமாகவுமா
ம். (க்ருதித்வ) ஆச்ரிதர் அபேக்ஷிதம்பெற்றால், அந்தலாபம் - தன்
னதாயிருக்கை; “ ஸர்வஸ்வம்வங்காயா”. இவர்கள் கர்த்தவ்ய
ங்களையடைய, த்தானே யேறிட்டுக்கொண் டிருக்கையென்னவு
மாம். ஸக்ருதிகஸேவிக்கிற்றநஃ. ( க்ருதஜ்ஞதா ) ஒருக்கால் சரண
மென்னு முகதிமாத்ரத்தாலே, பின்புசெய்யுங் குற்றங்கள் பா
ராதே, அத்தையே நினைத்திருக்கை. ஆச்ரிதர்க்கெல்லாம் செய்
தாலும், அவற்றைமறந்து, அவர்கள்செய்த ஸுக்ருதலவத்தையே
நினைத்திருக்கை யென்னவுமாம். “ ஹ்ருதயாந்நாபஸர்பதி”.
ஆச்ரிதவிஷயத்தில் த்தான்செய்த வுபகாரத்தையே நினைத்திருக்
கையென்னவுமாம். “ ஸ்வாபாவிகாநவதிகாதிசய” 
(ஆதி) சப்தத்தாலே, அனுக்தகுணங்களை நினைக்கிறது. ( அஸங்க்
யேய) இக்குணங்க ளெண்ணிறந்திருக்கை. (கல்யாண) உள்ளதெ
ல்லாம் நன்றாயிருக்கை ( குணகணௌக ) அவைதான் - திரள்திர
ளாயிருக்கை. ( மஹார்ணவ,) $ ஸ்வாபாவிகாநவதிகாதிசய 
“ ” ( ஸ்வோசிதேதி ) ஏவம்விதனானவனுக்கு சோபாவஹ
மான திவ்யாபரணங்களைச் சொல்லுகிறது. ஜ்ஞானாதிகள் - ஆத்
மஸ்வரூபத்துக்கு அலங்காரமான சோபாதி, விக்ரஹத்துக்கு
ஆபரணங்கள் - அலங்காரமாகையாலே, யவற்றைச் சொல்லுகிறார்.
( ஸ்வோசித ) அவயவங்கள்தா னொருபடிபூத்தாப்போலே தகுந்
திருக்கை. ( விவித ) அவைதான் - நாநாவாயிருக்கை அதாவது -
கிரீடாதிபேதத்தாலே பலவகைப்பட்டிருக்கை. ( விசித்ர ) அங்கு
லீயகம்என்றால், இடைச்சரி, கடைச்சரி, என்னுமாப்போலே,
ஒரோவகைகளிலே நாநாவிதமாயிருக்கை (அநந்தாச்சர்ய) எல்லை
யிறந்தவாச்சர்யத்தை யுடைத்தாயிருக்கை. (நித்யநிரவத்ய) நிர
வத்யங்களாயிருக்கு மவத்துக்கும், காதாசித்கமான வவத்யங்களு
ண்டாயிருக்கும் ; அங்ஙனன்றிக்கே, நித்யநிரவத்யங்களா யிருக்

$ ஸ்வாபாவிகஎன்றுதுடங்கி, இவ்வளவாக, நடுவே சிறிது-பாவ
ப்ரதானமாய், ஸமஸ்தமாகிலுமாம்.

மூ.—நிரதிஶய ஸௌகந்த்ய நிரதிஶய ஸௌகஸ்பர்ஶ நிரதிஶய ஔஜ்ஜ்வல்ய கிரீட மகுட சூடாவதம்ஸ மகர குண்டல க்ரைவேயக ஹார கேயூர கடக ஶ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தாதாமோதரபந்தந பீதாம்பர காஞ்சீகுண நூபுராத்யபரிமித திவ்யபூஷண, ஸ்வாநுரூபா

வ்யா.—கை. அதவா, (நித்ய) உத்பத்தி விநாசரஹிதமாயிருக்கை. (நிரவத்ய) "ஸர்வஸத்த்ராஸாரமெணயுக்தம்" என்கிறபடியே, திவ்யாபரணாழ்வார்கள்- சேதநராகையாலே, தந்தாமுடைய சோபை - ஸ்வார்த்தமன்றிக்கே யிருக்கை. சேதநரா யிருப்பார்க்கு, ஸ்வார்த்தமென்றிருக்கை-அவத்யமிறே. (நிரதிசயஸௌகந்த்த) "ஸர்வகந்த:" என்கிறவிஷயத்துக்கும் ஸ்ப்ருஹாவிஷயமாயிருக்கை. (நிரதிசயஸௌகஸ்பர்ச) அல்லாத வாபரணங்கள் - அழுக்குக்குறுப்பாகையாலே, போகத்தில் வந்தால், கழற்றவேண்டிவரும்; இவை யோவென்னில், பிராட்டிமாரோட்டை க்கலவியிலும், ஸ்ரக்சந்தநாதிகளோபாதி யனுகூலமாயிருக்கும். (நிரதிசயௌஜ்வல்ய) விக்ரஹகாந்தியையும் அமுக்குமௌஜ்வல்யத்தை யுடைத்தாயிருக்கை. (கிரீடமகுட) கிரீடமாகிறது- திருவபிஷேகத்தின் சுற்று. மகுடமாகிறது - மேல்கவிப்பு (சூட) திருச்சுட்டி. (அவதம்ஸ) திருச்செவிமலர். (மகரகுண்டல) மகராகாரமான திருத்தோடுகள். (க்ரைவேயக) திருக்கழுத்தில்ச்சாத்தும் திருவட்டமணிமுதலானவை. (ஹார) திருமார்வில்ச்சாத்தும் ஹாரம். (கேயூர) திருத்தோள்வளை. (கடக) திருவளைகள். (ச்ரீவத்ஸ) திருமறு. (கௌஸ்துப) ச்ரீகௌஸ்துபம். (முக்தாதாம) ஏகாவலீ, த்ரிஸரம். பஞ்சஸரம் துடக்கமான திருமுத்துவடங்கள். (உதரபந்தன) திருவுதரபந்தநம். (பீதாம்பர) திருப்பீதாம்பரம். (காஞ்சீகுண) அரைநூல் பட்டிகை. (நூபுர) திருவடிகளில் ச்சாத்தும் சிலம்பு. (ஆதி) சப்தத்தாலே, "புடையார் பொன்னூலினன்" என்கிறபடியே, அனுக்தமான திருயஜ்ஞோபவீதம், கணையாழிமோதிரம், முதலானவற்றைச் சொல்லுகிறது. (அபரிமித) "எண்ணில்பல்கலன்" னென்றும், "பலபலவேயாபரணம்" என்றும் சொல்லுகிறபடியே, திருவாபரணங்களுக்குத் தொகையில்லையென்கிறது. (திவ்யபூஷண,) சுத்தஸத்வாத்மகமாய், திவ்யாவயவங்களுக்கு மாபரணங்களுக்கு மூண்டான சேர்த்தியழகுக்கு மடியாயிருக்கை. (ஸ்வாநுரூபேதி)

மூ.—स्वानुरूपाचिन्त्यशक्तिशङ्खचक्रगदासिशार्ङ्गाद्यसङ्ख्येय
नित्य निरवद्य निरतिशय कल्याण दिव्यायुध
स्वाभिमत नित्यनिरवद्यानुरूप स्वरूप
रूपगुण विभवैश्वर्य शीलाद्यनव
धिकातिशयासङ्ख्येय कल्याण गुणगण

வ்யா.—கீழ்ச்சொல்லின வாபரணங்களோடு விகல்பிக்கலாம்படியான திவ்யாயுதவர்க்கத்தைச் சொல்லுகிறது. (ஸ்வானுரூப) கீழ்ச்சொன்ன பலவீர்யாதிகளையுடைய தனக்கனுரூபமாயிருக்கை. (அசிந்த்யசக்தி) ஸர்வசக்தியினுடைய சக்தியைப் பரிச்சேதிக்கிலும், பரிச்சேதிக்க வரிதானசக்தியை யுடைத்தாயிருக்கை ( சங்கசக்ரகதாசார்ங்க)§இவையஞ்சுக்கு முப்பலக்ஷணம்.அஸிசப்தவிதுரமாகவே கிடக்கிறது. பத்யவத், கத்யத்துக்கு மொருநியதியுண்டாயிருத்குமிறே என்று பிள்ளை யருளிச்செய்வர். (ஆதி) இவைமுதலான (அஸங்க்யேய) இவைதான் எண்ணிறந்திருக்குமிறே. ஆபரணங்களோபாதி,திவ்யாயுதங்களுக்கும் தொகையில்லாமையாலே, ப்ரதானமானசில சொன்னவித்தனை. (நித்ய) உத்பத்தி விநாசரஹிதங்களாயிருக்கை. (நிரவத்ய)சின்மயராகையாலே, ப்ரதிகூல நிரஸநாதிகளில் ப்ரவ்ருத்தி-ஸ்வார்த்தமாயிராதே, சேஷிக் குறுப்பாயிருக்கை. அதவா, (நிரவத்ய) நாள்ச்செல்ல நாள்ச்செல்ல, மழுங்கிவருகையன்றிக்கே, "மழுங்காத வைநுதிய" என்கிறபடியே, சத்ருசரீரங்களில் தைக்கதக்க ச்சாணையி லிட்டாப்போலே கூர்மைமிக்கிருக்கை ( நிரதிசயகல்யாண ) ஸ்வஸம்பந்தத்தாலே, ஸ்வமங்களங்களையு மத்தலைக்குண்டாக்க வற்றாயிருக்கை. அதாவது - ஆச்ரித விரோதி நிரஸனத்தில் வந்தால், ஈச்வர ஸங்கல்பத்திலும் முற்பாடராயிருக்கை. "அறமுயலாழி" யிறே. (திவ்யாயுத,) அப்ராக்ருத விக்ரஹமாயிருக்கை. (ஸ்வாபிமத நித்ய நிரவத்யானுரூப ஸ்வரூபரூபகுண விபவைச்வர்ய சீலாத்யனவதிகாதி சயாஸங்க்யேய கல்யாண குணகணேத்யாதி) கீழ்ச்சொன்ன விக்ரஹாதிவைலக்ஷண்ய மடையக்காட்டி லெரித்த நிலாவாகாதபடி போக்த்ரிகளான மஹிஷீவர்க்கத்தைச் சொல்லுகிறது. ப்ரதமசூர்ணயிலும் மிக்குணங்களுக்கதமாயிருக்க, திரியட்டும் சொல்லவேண்டுவானென்னென்னில்; இவர்தாம் - பரோபதேச ப்ரவ்ருத்தரன்றிக்கே, ஸ்

§ இது - மேலாதிசப்தத்தோடு விரோதிக்கிறது.

மூ.—ஸ்ரீவல்லப, ஏவம்பூத பூமிநீளாநாயக, ஸ்வச்சந்தாநுவர்த்திஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திபேத அஶேஷஶேஷதைகரதிரூப நித்ய

வ்யா.—வயமனுபவிக்கிறவ ராகையாலே, அவ்வனுபவத்தில் பிறந்த வினிமையாலே சொல்லுகிறார். அதவா, அங்கு, சரண்யதைக்குறுப்பாகவருளிச்செய்தார்; இங்கு, வால்லப்யத்துக் குறுப்பாக வருளிச்செய்கிறார். இங்குள்ள பதங்களுக்கு அர்த்தமதுவே. (ஸ்ரீவல்லப,) ஏவம்விதவைலக்ஷண்யோ பேதையான பிராட்டிக்கு நாயகனானவனே. பசியன், சோற்றின்மேலே விழுமாப்போலே, அவன்றானும் மேல்விழும்படியா யிருக்கை. “பித்தர் பனிமலர்மேல்பாவைக்கு” என்னக்கடவதிறே. இவ்வால்லப்யம் - புருஷகாரபாவத்துக்கும், ப்ராப்யதைக்கு முறுப்பாயிருக்குமிறே. (ஏவம்பூத) ஏவம்விதவைலக்ஷண்யாவஹைகளான. (பூமீநீளாநாயக,) “வடிவிணையில்லா மலர்மகள் மற்றைநிலமகள்” என்னக்கடவதிறே. கீழ், ஸ்ரீவல்லப என்றது; இங்கு, நாயக என்கிறது - இவர்கள்பக்கல் முறையாலே பரிமாறுகையும், அவள் பக்கல் முறைகெடப்பரிமாறுகையும். இம்முறைக்கேடுதனக்கு, இவர்கள்தானு மெழுதிக்கொடுத்திறே யிருப்பது. (ஸ்வச்சந்தானுவர்த்தி) இப்படி, பிராட்டிமாரோட்டைச் சேர்த்தியே - தங்களுக்கு ஸ்வரூபலாபமாய், அவர்களோட்டைக் கலவிக்குக் கைதொடுமானமாயிருக்கிற பரிஜனத்தைச் சொல்லுகிறது. (ஸ்வச்சந்தானுவர்த்தி) நித்யஸூரிகள் - முகமறிந்து பரிமாறுமவர்களாகையாலே, ஸ்வசந்தானுவர்த்திகளாயிருப்பர்கள்; ஸம்ஸாரிகள் - முறையறியாதே பரிமாறுகையாலே, ஸங்கல்பானு வர்த்திகளாயிருக்கும். (ஸ்வச்சந்தானுவர்த்தி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திபேத) ங்களாவது - ஈச்வரன், யாவசில்ரைக்கொண்டு, யாதோரடிமைகொள்ள நினைத்தருளுகிறான்; அவ்வடிமைக் கனுரூபமான ஸ்வரூபமும், ஸ்திதியும், ப்ரவ்ருத்தியுமாயிருக்கை. “ஸாவஜேகுந” என்னக்கடவதிறே. (அசேஷசேஷதைகரதிரூப) ஈச்வரன் அடிமைகொள்ளும்போது, அவ்வோ அடிமைகளில் வ்யவஸ்திதரா யிருக்குமத்தனைபோக்கி, அவ்வாதரத்தைப்பார்த்தால், ஸர்வசேஷவ்ருத்தியிலுண்டான வாதரத்தையேவடிவாக வுடையராயிருப்பர்கள். தாஸ்யோப காரணங்களைச் சொல்லுகிறது மேல் (நித்ய) மூக்த்தரைப்போலே யொருக்கா

மூ.—நிரவத்ய நிரதிசய ஜ்ஞாநக்ரியைச்வர்யாத்யந
ந்தகல்யாண குணகண சேஷசேஷாசந க
ருடப்ரமுக நாநாவிதாநந்த பரிஜநபரி
சாரிகாபரிசரித சரணயுகள, பரமயோ
கி வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூப ஸ்வபாவ

வ்யா.—இல்லாமல், ஒருக்காலுண்டாகை யன்றிக்கே, எப்போது முண்டாயிருக்கை. (நிரவத்ய) ஜ்ஞாநாதிகள் - ஸ்வோத்கர்ஷஹேதுவாயிருக்கை யன்றிக்கே, "ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்று கைங்கர்யத்துக்கனுகூலமாயிருக்கை. (நிரதிசயஜ்ஞான) அடிமைக்குறுப்பான ஸங்குசிதஜ்ஞானம். (க்ரியா) ஜ்ஞாநாநுரூபமான வ்யாபாரம். (ஐச்வர்ய) அடிமைக்குறுப்பான நியமனம். ஸேனைமுதலியார், பிரம்புங்கையுமாய் பிறரை நியமிக்கு மதுவும் - அங்குற்றைக் குறுப்பாயிருக்குமிறே. (ஆதி) சப்தத்தாலே, அனுக்தங்களான குணவிசேஷங்களை நினைக்கிறது. (அநந்த) ஈச்வரனுடைய ரக்ஷணவிஷயமான குணங்களுக்குத் தொகையில்லாதாப்போலே, கைங்கர்ய விஷயமான குணங்களுக்குத் தொகையின்றிக்கே யிருக்கை. (குணகண) திரள்திரளாக வறியுமத்தனைபோக்கி, தனித்தனியேகாண வரிதாயிருக்கை. (சேஷ) திருவனந்தாழ்வான். (சேஷாசன) ஸேனைமுதலியார். (கருட) பெரியதிருவடி. (ப்ரமுக) இவர்கள் துடக்கமான. (நாநாவித) சண்டாதித்வாரபாலர்கள், குமுதாதிகணாதிபர்கள் முதலான விவிதபேதங்கள். (அநந்தபரிஜன) குணங்களுக்குத் தொகையில்லாதாப்போலே, யிவர்களுக்கும் தொகை யின்றிக்கேயிருக்கை. (பரிசாரிகா பரிசரிதசரணயுகள,) ஏவம் விதஜ்ஞாநாதிகளையுடைய விமலாதிகளென்ன, ஸுந்த்ரவதீமுதலான விவர்கள் மஹிஷிகளென்ன, இவர்களாலே யடிமை செய்யப்பட்ட திருவடிகளையுடையவனே. இவர்கள்மஹிஷிகள், தம்போகத்துக் குறுப்பாகை யன்றிக்கே, அங்குத்தைக் குறுப்பாயிருப்பரிறே. (பரமேதி) ஸூரிபோக்கியமான கைங்கர்யத்தினுடைய ஸ்வரூபம் சொல்லித்து கீழ்; அந்த கைங்கர்யத்துக்கு வர்த்தகமான தேசவிசேஷத்தைச் சொல்லுகிறது மேல் (பரமயோகி வாங்மனஸா பரிச்சேத்யஸ்வரூபஸ்வபாவ) "உத்தாநாம் லக்ஷணம் தேவ்ய தத் ஸ்வதேவாதிநாம்" என்கிற ஸநகாதிகளுடைய வாங்மனஸ்ஸுக்களால பரிச்சேதிக்க

சூ.—ஸ்வாபிமத விவிதவிசித்ராநந்த போக்ய போ
கோபகரண போகஸ்தாந ஸம்ருத்தாநந்தாஶ்ச
ர்யாநந்த மஹாவிபவாநந்த பரிமாண நி
த்ய நிரவத்ய நிரதிஶய வைகுண்டநாதம்,.

---

வ்யா.—வொண்ணாத ஸ்வரூபஸ்வபாவங்களை யுடைத்தாயிருக்கை. அதாவது-பஞ்சோபநிஷன்மயம், சுத்தஸத்வமயம் என்று, திரளநினைத்தல், சொல்லுதல் செய்யுமத்தனையொழிய, ஏவம் ஸ்வரூபம், ஏவம் ஸ்வபாவம், என்று பரிச்சேதிக்கவரிதாயிருக்கை. பஞ்சோபநிஷன்மயமாகையாலே, ஏகத்ரவ்யமென்னவொண்ணாது, அநேகத்ரவ்யோபசயாத்மக மாகையாலே, நித்யத்ரவ்யமென்ன வொண்ணாது, அவஸ்தாந்தராபத்தியில்லாமையாலே, பரிணமஸ்வபாவமென்ன வொண்ணாது, பகவத்ஸங்கல்பத்தாலே சிலவுண்டாகச் சொல்லுகையாலே, யேகரூபமென்ன வொண்ணாது. ஆகையால், அளவுடையராயிருக்கும் பரமயோகிகளாலும் பரிச்சேதிக்கவொண்ணாதாயிருக்குமாய்த்து தேசம். (ஸ்வாபிமத) "அன்புற்றமர்ந்துறைகின்ற" என்கிறபடியே அபிமதமாய். (விவிதவிசித்ர) நாநாவிதமாய். (அநந்த) முடிவில்லாதிக்கே யிருப்பதான. (போக்ய போகோபகரண போகஸ்தானஸம்ருத்த) போக்யங்களான அப்ராக்ருதமான சப்தாதிகளென்ன, போகோப கரணங்களான சூட்டு நன்மாலைபரிஜன பரிச்சதாதிகளென்ன, போகஸ்தானங்களான தேசவிசேஷங்களென்ன, இவற்றாலே ஸம்ருத்தமாயிருந்துள்ள. (அநந்தாச்சர்ய) அளவிறந்த வாச்சர்யத்தையுடைத்தான. (அனந்தமஹாவிபவ) அனந்தோத்யான நதீதடாகாதி லக்ஷணமான விபவத்தையுடைத்தாயிருக்கை. அனந்தாச்சர்ய மாகையாவது - க்ருதகம் என்றுதல், புராதனம் என்றுதல், சொல்லவொண்ணாதே, அக்ருத்ரிமமாய், ப்ரதிக்ஷணமபூர்வமாயிருக்கை. மஹத்வமாவது-போக்தாக்களாலனுபவித்து முடிக்கவொண்ணாதிருக்கை. (அனந்தபரிமாண) ஆயாமவிஸ்தாரங்களா லளவிறந்திருக்கை. (நித்யநிரவத்ய நிரதிசயவைகுண்டநாத,) ஸதைகரூபமாய், ஹேயப்ரத்யநீகமாய், ஸர்வப்ரகாரத்தாலு மதிசயிதமான ஸ்ரீவைகுண்டத்துக்கு நாதனானவனே. பரமபதத்தில் போக்தாக்களைச் சொல்லாதொழிந்தது, "ஒண்டொடியாள் திருமகளும்நீயுமே நிலாநிற்ப" என்கிறபடியே, இவர்கள்-போகத்துக்குக் கைதொடுமான மாமாகார

மூ.—ஸ்வஸங்கல்பாநு விதாயிஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திஸ்வசே ஷதைக ஸ்வபாவ ப்ரக்ருதிபுருஷ காலாத்மக விவித விசித்ராநந்தபோக்ய போக்த்ருவர்க்க போகோபகரண போகஸ்தாந ரூப நிகிலஜகதுதய விபவலயலீல,

வ்யா.—மொழிய, 'அஹம்மம என்றிருப்பாரில்லாமையாலே. ஆனல்,ச்ருதி, "சுந்நாஉ:" என்று, போக்தாக்களைச் சொல்லித்தில்லையோவென்னில் ; தான், அங்குத்தைக்கு ஸ்ரக்ச்சந்தனதிகளோபாதிபோகோபகரணமாயிருக்கு மிருப்பு-புருஷார்த்தமாகையாலேசொல்லித்திதனே. அங்ஙனன்றாகில, "சுஷமேந்நம்" என்றத்தோடுவிரோதிக்குமிறே. (ஸவஸங்கல்பேதி) இப்படி, அப்ராக்ருதமான நித்யவிபூதி யுக்தனுக்கு, ஆவதழிவதாய், லீலாரஸஹேதுவான லீலாவிபூதியோகம் சொலலுகிறதுமேல் (ஸ்வஸங்கல்பானுவிதாயிஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி) ஸ்வஸங்கல்பத்தைப் பின்செல்லாநின்றுள்ள ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளையுடைத்தாய். ப்ரக்ருதிக்குஸ்வரூபமாவது - ஸத்வாதி குணகமான ஜன்யத்வம். ப்ரக்ருதியாவது - ஸத்வாதிகுணத்ரயாத்மகமாய், அனந்தமாய், விசித்ரமான வஸ்தாவிசேஷரூப பரிணமத்துக்கு ஸமர்த்தமாயிருந்துள்ள ப்ரதானம். ஸ்திதியாவது - சேதநர்க்கு, போகமோக்ஷஸாதநானுஷ்டானத்துக்கும், பலானுபவத்துக்கு முபகரணமாயிருக்கை. ப்ரவ்ருத்தியாவது - ததர்த்தமாக போக்ய போகோபகரண போகஸ்தானரூபேண பரிணமிக்கை. ஸம்ஸாரி சேதனனுக்கு ஸ்வரூபமாவது - அசித்விசிஷ்டாகாரத்வம். ஸ்திதியாவது - அன்னதிக்ளால் தரிக்கை. ப்ரவ்ருத்தியாவது - புண்யபாபரூப கர்மானுஷ்டானமென்ன, தத்பலானுபவமென்ன இவை. காலத்துக்கு ஸ்வரூபமாவது - அசித்வம். ஸ்திதியாவது - சேதநாசேதனங்களினுடைய பரிணமங்களுக்கு நிர்வாஹகமாயிருக்கை. ப்ரவ்ருத்தியாவது - நிமேஷகலாகாஷ்டாதிரூபத்தாலே, உத்பத்தி விநாசங்களை ப்ரவ்ருத்திப்பிக்கை. (ஸவசேஷதை கஸவபாவ) தனக்கனன்யார்ஹசேஷமாயிருக்கை. (ப்ரக்ருதிபுருஷகாலாத்மக) ப்ரக்ருதி சேதனகாலரூபமாய். (விவிதவிசித்ர) விசித்ரமாய். (அனந்த) அனந்தமான. (போக்ய) போக்கியமென்ன. (போக்த்ருவர்க) போக்த்ருவர்க்கமென்ன. (போகோபகரண) போகோபகரணங்களென்ன (போகஸ்தான) போகயோக்யமான ஸ்தானவிசேஷங்களென்ன. (ரூப)இவற்றை வடிவாகவுடைய. (நிகிலஜகதுதய விபவலயலீல,)

வ்யா.— ஸகலலோகங்களினுடைய உத்பத்தி ஸ்திதி ஸம்ஹாரங்களை லீலையாகவுடையவனே. விசித்ரமாகையாவது-நாநாவிதமாயிருக்கை. அனந்தமாகையாவது-தொகையிலிறக்கே யிருக்கை. போக்த்ருவர்க்கமாவது-தேவாதி சரீரங்களிலே ஸம்ப்ருக்தியாலே ஸ்வதந்த்ரராய், சப்தாதிவிஷயங்களுக்கு போக்தாக்களாகை. ப்ரஹ்மாதிகளுக்கு ஸ்ரஷ்ட்ருத்வாதிகளுண்டாகிறது, ஈச்வரனுக்கு பகரணதயாவல்லது, ஸ்வதந்த்ரதயாவல்ல. ஆனால், து:க்கரூபமாயிராதோவென்னில்; அவர்களுக்கு தப:பலமாய்வந்ததாகையாலே ஸுகரூபமாயிருக்கும்; நித்யவிபூதியோகத்தால்வந்த பூர்த்தியை யுடையனாகையாலே, யீச்வரனுக்கிது - லீலையாயிருக்கும். ஆக, நாராயணசப்தார்த்தம் சொல்லித்தாய்த்து. ஸர்வேச்வரன் திருவடிகளை யாச்ரயிக்கலாவது - உபேயருசியும், உபாயாத்யவஸாயமு முண்டானாலாகையாலே, அதினுடைய ஸித்யர்த்தமாக, முதல்சூர்ணையிலே பிராட்டி திருவடிகளிலே சரணம்புககார். இரண்டாம் சூர்ணையிலே, பிராட்டி ப்ரஸாதத்தாலே யத்தைப்ராப்தரானார். அனந்தரம், ஆச்ரயணீயராவாரார்என்னு மபேக்ஷையிலே, "காரணந்து த்யேய:" என்றும் "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்" என்றும் இத்யாதியாலே, ஸகல ஜகத்காரணபூதனான நாராயணனே-யாச்ரயணீயனாகவேண்டுகையாலே, அகிலஹேய என்கிற சூர்ணையிலே, நாராயணசப்தவாச்யங்களுக்கு ஆச்ரயமான திவ்யாத்மஸ்வரூபத்தைச்சொல்லி, அனந்தரம், ஸ்வரூபகுணங்களுக்கு ப்ரகாசகமான திவ்யமங்கள விக்ரஹத்தைச்சொல்லி, அனந்தர மவ்விக்ரஹத்துக்கு அலங்காரமான திவ்யாபரணங்களைச்சொல்லி, அனந்தரம், ஏவம் விதமானவத்துக்குக் காவலான திவ்யாயுதவர்கங்களைச்சொல்லி, அனந்தரம், இப்போக்யதை - காட்டிலெரித்த நிலாவாகாதபடி தலை நீர்ப்பாட்டிலே யிருந்தனுபவிக்கும் மஹிஷிகளைச்சொல்லி, அனந்தரமிச்சேர்த்தியழகைக்கண்டனுபவித்துத் தோத்தெழுதிக்கொடுத்து, எடுத்துக்கை நீட்டிப்பரிமாறும் திவ்யபரிஜனங்களைச்சொல்லி, அனந்தரம், கைங்கர்யத்துக்கேகாந்தமாய், தத்வர்த்தகமுமான நித்யவிபூதியைச்சொல்லி, அனந்தரம் ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு விஷயமான லீலாவிபூதியைச்சொல்லி, இப்படியவனுடைய வுபயவிபூதிநாதத்வத்தைப் பேசியருளினார். இனியாச்ரயிக்கையிறே-யுள்ளது ; அவ்வாச்ரயணத்துக்குபயோகியான

மூ.—ஸத்யகாம,

வ்யா.—குணங்களைச்சொல்லுகிறதுமேல் அபாரகாருண்யே த்யாதியாலே நடுவேயெட்டுகுணங்கள் சொல்லாநின்றதே, அவ ற்றால்சொல்லுகிறதென்னென்னில் ; மேல்பண்ணப்புகுகிற வா ச்ரயணத்துக்குறுப்பாய், கீழ்ச்சொன்னவற்றை யனுபாஷிக்கிறது மாயிருககிறது. கீழ், ஆச்ரயணீயனைச்சொல்லித்தாகில், அனந்தா மாச்ரயிக்கவமையாதோ வென்னில் ; அமையாது. ஆசார்யோப தேசபூர்வகமாய்மே யாச்ரயணமிருப்பது, அவ்விடத்திலாசார் யோபதேசமுகத்தாலே, அவனே-ப்ராப்யப்ராபகங்களென்று அ த்யவஸித்து, அனந்தாமாச்ரயிக்கவேண்டும். அல்லாதபோது, அ வனுடைய ரக்ஷகத்வத்திலேயாதல், உபாயத்வத்திலேயாதல், அதி சங்கைநடககுமாகில், ஆச்ரயித்தவனுகமாட்டான். ஆகையால், "ஸ ந்தேஹோஸ்யவாஜ்ஞீஷ்டே" என்று, "ஜ்ஞாவிஷ்வாஸப்ரஸவந்கம் தஹோகோபாயதாயாஜ்ஞாஸ்யவத்திः" என்னும் ந்யாயத்தாலே, கீழ்ச்சொன்ன நாராயணத்வத்தை யனுபாஷித்துக்கொண்டு, அவ னேயுபாயோபேயங்களென்றுஅத்யவஸிக்கிறார். இரண்டாம் சூர் ணையிலே,பிராட்டி ப்ரஸாதத்தாலே தாம்பெற்ற வர்த்தத்தையனு ஸந்திக்கிறார். முதல் நாலுகுணங்களும்-ஸ்ருஷ்டிக்குறுப்பு. மேல் நாலுகுணங்களும் - ப்ராப்யத்வத்துக்குறுப்பு. ஸத்யகாம, ஸத் யஸங்கல்ப, பரப்ரஹ்மபூத,என்கிறவை - லீலாவிபூதி சூர்ணையோ டே யந்வயித்துக்கிடக்கிறது. புருஷோத்தம, நாராயண, என்கிற வை - குணசூர்ணையோடே யந்வயித்துக்கிடக்கிறது. மஹாவிபூ தே, ஸ்ரீவைகுண்டநாத என்கிறவை - நித்யவிபூதி சூர்ணையோடே யந்வயித்துக்கிடக்கிறது. ஸ்ரீமன் என்னுமது-மஹிஷீ சூர்ணையோ டே யந்வயித்துககிடக்கிறது. ஸ்ரீ வைகுண்டநாத என்கிறவிது-ஆ ச்ரயித்தால் அடிமைகொள்ளும் தேசத்தைச்சொல்லுகிறது. ஆச்ர யித்தால், பின்னையடிமைசெய்கைபோலேகாணும் சேஷபூதனுக்கு க்ருத்யம். இத்தால், அடிமைகொள்ளும்படி யாச்ரயிக்கையே - யாச்ரணமென்றதாய்த்து (ஸத்யகாம,) "காமஸ்யஹாஸகாः கா மः" என்று நிவண்டு, காமசப்தமும், ஸ்மாசப்தமும், இச்சிக்கப் படுமத்தையும், இச்சையையும் சொல்லுகிறது. கீழே ஸத்யகாம, என்றது,ஆச்ரயித்தார்க்கனுபாவ்யமாய், அவ்வழியாலே தனக்கும் காமவிஷயமான விபூதியைச்சொல்லுகிறது. இங்கு, ஸத்யகாம

மூ.—ஸத்யஸங்கல்ப,

வ்யா.—என்றது, லீலார்த்தமாக ப்ரக்ருதி புருஷகாலங்களை ஸ்ப்ருஹாவிஷயமாகவுடையவனென்கிறது. கீழ் காமிக்கப்படுமவற்றைச்சொல்லித்து ; இங்கு காமத்தைச்சொல்லுகிறது. (ஸத்ய) சப்தம்-நித்யவாசி. ஸ்ருஷ்டிக்கு விஷயமான புருஷஸமஷ்டி, ஸம்ருஷ்டரானசேதனர்க்கு போக்ய போகோபகரண போகஸ்தானரூபையானப்ரக்ருதி,இவற்றை கர்மானுகுணமாக நிர்வஹிக்கைக்கு காலம்.ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் - ப்ரஹ்மாதிகளுக்கு தப:பலமாகையாலே போகரூபமாயிருக்கும். ஈச்வரனுக்கு லீலையாயிருக்கும் ஐச்சிகமாகையாலே. லீலையென்கிறது-சேதனனுக்கு பந்தகமுமாய், நாசஹேதுவுமாய், ஈச்வரனையும் மறைத்து அனர்த்தாவஹமாயிருக்க, ஈச்வரனுக்கு ஸ்ப்ருஹாவிஷயமாவா னென்னென்னில்; “ ஶுபேதரே ஸ்ருஷ்டிஸம்ஹாரேஷ்வபி லீலைக:” என்கிறபடியே, ஒன்றிரண்டு வ்யக்தியிலே பலிக்கக்காண்கிறதிறே. அன்னசையாலே யாயிற்றிவனுக்கு ஸ்ப்ருஹையைவிளைக்கிறது. ஆகையிறே, அழித்தழித்து ஸ்ருஷ்டிப்பது, ஸ்திதிப்பிப்பது, அதிப்ரவ்ருத்தமானவாறே, ஸம்ஹரிப்பது, பின்னையுமிது தன்னையே செய்வதாகா நிற்கிறது. யென்போலவென்னில் ; ஒருக்ஷேத்ரம் - நெடுங்காலம் இட்டிறை யாய்ப்போகாநின்றாலும், ஒருக்கால் பலிக்ககாண்கை யாலே, யழித்தழித்துப் பயிர் செய்யும் கர்ஷகனைப்போலே. (ஸத்யஸங்கல்ப,) கீழேயும், ஸத்யஸங்கல்ப என்றது, ஆச்ரயித்தார்க்கனுபாவ்யமான வபூர்வபோகங்களைத் தன்நினைவாலே ஸ்ருஷ்டிக்க வல்லனென்கைக்காக அங்கு, ஸத்யசப்தம் - அமோகவாசி. இங்கு (ஸத்யஸங்கல்ப,) என்றது, லீலைக்கு ஹேதுவான ஸங்கல்பம் - அப்ரதிஹதமாயிருக்கு மேன்மைக்காக. அதாவது - இவற்றையமோகமாகத் தன்னினைவிலே ஸ்ருஷ்டிக்கவல்லனுகை. ப்ரஹ்மாவினுடைய ஸங்கல்பமும் - மோகமாயிருக்கும் எங்ஙனேயென்னில் ; ஸனகாதிகளைத் தன்னினைவாலே ஜகத்ஸ்ருஷ்டிக்குறுப்பாக ஸ்ருஷ்டித்தான்; அவர்களோவென்றால், ஶ்ரேயஸ்காமான வெங்களுக்கு இச்செயலாகாது,'உனக்கேயாமித்தனை யென்று இகழ்ந்து போனார்கள். தான்ஸ்ருஷ்டித்த ஸஸுரர்கள்கையிலே வேதத்தைப்பறிகொடுத்து, தான் ஈச்வரன்காலிலேவிழுந்து, “ வேதாஶ்வை மே சக்ஷு:” என்று, முறையிட்டான். மேலே, யவனு

மூ.—பரப்ரஹ்மபூத, புருஷோத்தம, மஹாவிபூதே,

வ்யா —டைய திருவடிகளிலே சரணம் புகுகைக்குறுப்பாக ஸ்ருஷ்டி முதலாக, புருஷார்த்தத்துக் கெல்லையான கைங்கர்யபர்யந்தமான நடுவுள்ளவையடங்க - அவனிட்டவழக்கென்று, அருளிச்செய்கிறார் எட்டு ஸ்வபாவத்தாலே (ஸத்யகாம,) சேதனருடைய சரீரஸம்பந்தத்துக்கடியான ஸ்ருஷ்டிக்குபகரணமான நித்யபதார்த்தங்களையுடையவனென்கிறது.' ஸத்யஸங்கல்ப,) ஸ்ருஷ்ட்யர்த்தமாக ஸங்கல்பிக்கும் ஸங்கல்பமமோகமாயிருக்குமென்கிறது. குணசூர்ணையிலே, இவ்விரண்டுகுணமு முக்தமாயிருக்க, இங்கும் சொன்னால் புநருக்தமன்றோவென்னில் ; அங்குகுணஸத்பாவத்துக்காகச் சொல்லித்து; இங்குஸ்ருஷ்ட்யர்த்தமாகச் சொல்லுகிறதாகையாலே தோஷமில்லை. (பரப்ரஹ்மபூத,) "ஸஹஸ்ரா" என்கிறபடியே, ஜகதாகாரனாய் ப்ரும்ஹிதனாகை ஸ்தூலசித சித்விசிஷ்டப்ரஹ்மமேயிறே கார்யமான ஜகத்தும். (புருஷோத்தம,) புருஷாணாமுத்தமः. புருஷாணாம்என்கிற ஸஹ்வசனத்தாலே, த்ரிவிதசேதனரையும் வ்யாவர்த்திக்கிறது. புருஷः, உத்புருஷः, உத்தரபுருஷः, உத்தமபுருஷः. புருஷராகிறார் - அசித்வ்யாவ்ருத்தரான பத்தசேதனர். உத்புருஷராகிறார் - பத்தரில் வ்யாவ்ருத்தரான முக்தர். உத்தரபுருஷராகிறார் - முக்தரில் வ்யாவ்ருத்தரான நித்யர். உத்தமபுருஷனாகிறான்-ஸூரிகளிலும் வ்யாவ்ருத்தனான ஈச்வரன். பத்தர் - ஹேயாகாரராயிருப்பர். முக்தர்-ஹேயத்தினின்றும் ஒருநாள் குளித்தேறினவராயிருப்பர்கள். நித்யர். ஹேயரஹிதராயிருப்பர்கள். ஈச்வரன் - ஹேயப்ரதிபடனாயிருப்பன். ஈச்வரன் - த்ரிவிதசேதனாசேதனங்களிலும் அந்தராத்மதயாநிர்கசச்செய்தே, அவற்றினுடைய ஹேயகந்தம் தட்டாதவனாய்,ஆச்ரிதருடைய ஹேயத்தைப்போக்கவல்லனுமாயிருக்கும். இத்தால், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய வ்யாபனபரணஸ்வாம்யத்தாலுண்டான வைலக்ஷண்யம் சொல்லுகிறது. இத்தாலுஜ்வலனாகாநிற்குமென்றதாய்த்து. அங்ஙனன்றிக்கே, ஸ்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளுக்கு அபேக்ஷிதபுருஷார்த்தங்களைக் கொடுக்குமவனாகையாலே, புருஷோத்தமனென்னவுமாம். புரு-ஸஹ்வ,ஸநோதி-ததாதிஎன்றே யிதுக்கு வ்யுத்பத்தி. (மஹாவிபூதே,) கீழேயும் பூதியைச்சொல்லித்து; மேலும் விபூதியைச்சொல்லப்புகாநின்

மூ.—ஶ்ரீமந்நாராயண, ஶ்ரீவைகுண்ட நாத,
அபாரகாருண்ய ஸௌஶீல்ய வாத்ஸல்ய

வ்யா.—ரது. இப்படி சொல்லுகை - புநருக்தமன்றோவென்னில்; விபூதிமான் என்கைக்காக விபூதியோகம் சொல்லித்துக்கீழ், அனன்யப்ரயோஜனராயிருப்பார்க்கு அவ்விபூதியைக் கொடுக்குமென்று-விபூதி ஔதார்யம் சொல்லுகிறதிங்கு, மேலடிமைக்கே காந்தமான தேசமென்று விபூதியோகம்சொல்லுகிறது. ஆகையாலே தோஷமில்லை. (ஶ்ரீமந்,) கொடுத்ததேசத்தில் போக்யவிஷயத்தைச்சொல்லுகிறது. அங்கு இருவருமாயிறே - யடிமைகொள்ளுவது. "வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதிः - ஆஸ்தே" என்னக்கடவதிறே. (நாராயண,) அனந்தமங்கள குணங்களோடே குறைவறவிருந்து, அடிமைகொள்ளுமவனென்கிறது. ஆக, ஶ்ரீமன்னாராயண என்கையாலே, யொருமிதுனமே-ப்ராப்யம் என்கிறது. (ஶ்ரீவைகுண்டநாத,) அடிமைகொள்ளுகைக்கே காந்தமான பரமபதத்திலே, நாதனாயிருந்து அடிமைகொள்ளுமென்கிறது. இவற்றில், கீழ் நாலுகுணங்களும். ஸ்ருஷ்டிக்குறுப்பாயிருக்கும். மேல், நாலுகுணங்களும், - ப்ராப்யத்வத்துக்குறுப்பாயிருக்கும். காரணமுமாய் ப்ராப்யமுமான வஸ்துவிறே ப்ராபகம். அனந்தரமாஶ்ரயணீயத்வத்தில் ப்ரகாஷ்டோபகாரகங்களான குணங்களைச் சொல்லுகிறது (அபாரகாருண்யேத்யாதி) காருண்யமாகிறது - க்ருபை. அதாகிறது - பரது:க்காஸஹிஷ்ணுத்வம். இது-அபாரமாகையாவது-"யதிவா ராவணஸ்ஸ்வயம்" என்றவனளவும் செல்லுகை. அங்ஙனன்றியே, யென்னளவும் வர வெள்ளம் கோக்கும்குணமென்னவுமாம். (ஸௌஶீல்ய) உயர்ந்ததான், தாழ்ந்தவர்களோடேவந்து கலவாநின்றால், இவன் - நம்முடையானென்று, புரையறக்கலக்கலாம்படியாயிருக்கை. இதுக்கபாரத்வமாவது-தேவமநுஷ்யாத்யவதாரங்கள்போலன்றிக்கே, உத்க்ருஷ்டமாத்யவதாரங்களிலும் இவை நம்முடையதென்றிருக்கையும், தானுமவற்றிலே யொன்றாயிருக்கையும்,இவற்றிலே நாமொன்று என்று நினைத்திருக்கையும; "அஹம்வோ பாந்தவோ ஜாதः" ரூத்மானஜாநந்தஷிம்ஶதே". (வாத்ஸல்ய) வாத்ஸல்யமாவது ப்ரேமத்தாலே, யாஶ்ரிதகதமானதோஷமும் குணமாகத்தோற்றுகை. "குன்றனையகுற்றம் செயினும்குணங்கொள்ளும்." இதுக்கபாரத்வமாவது-

மூ.—ஔதார்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மஹோததே, அநாலோசித விசேஷாசேஷலோகசரண்ய, ப்ரணதார்த்திஹர, ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே,

---

வ்யா.—ஆஶ்ரிதரளவன்றிக்கே "ரிபூணாமபி வத்ஸல:" என்று, சத்ருக்கள் பக்கலிலும் அப்படியிருக்கை. ஆனால் பய்யல் தலையை யறுத்துவிடுவானென்னென்னில்; அவர்கள் பக்கலிலுமவன் படியில்க்குறையில்லை; அதுவும் ஜீவியாதபடி யவர்கள் சூழ்த்துக்கொண்ட வித்தனை. அங்ஙனன்றியே, தலையறுக்கை தானும் வாத்ஸல்யமாகவுமாம். எங்ஙனேயென்னில்; விளையாடக்கொடுத்தகோலைக்கொண்டு, ப்ரஜை - கண்ணைக்கலக்கிககொள்ளப் புக்கால், கையிலகோலைவாங்கி யிட்டுவைக்கும் - தாயைப்போலே. (ஔதார்ய) ஔதார்யமாவது-ஆஶ்ரிதர்க்கு ஸ்வாஜவாறூவாஜவாபேக்ஷிதங்களைத் தன்பேறாகக்கொடுக்கை இதுக்கபாரத்வமாவது - ஆஶ்ரிதர்க்கெல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்திலனாகவெப்போதும் நெஞ்சாறல்ப்பட்டுக்கொண்டிருக்கை. "ருணம் ப்ரவ்ருத்தமிவ" "உன்னடியார்க்கென்செய்வனென்றேயிருத்தி". (ஐச்வர்ய) ஐச்வர்யமாவது - அர்த்திகள் அர்த்தித்தவையெல்லாம் கொடுக்கும்படியான வடியுடைமை. இதுக்கபாரத்வமாவது - அவ்வடியுடைமைதான் - இவ்வளவென்றிருக்கை யன்றிக்கே, கொடுக்கக்கொடுக்க மேன்மேலென வளர்ந்துகொடுசெல்லுகை. (ஸௌந்தர்யமஹோததே,) ஸௌந்தர்யமாவது-அழகு. இதுக்கபாரத்வமாவது- "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்கிறபடியே, சரகிலதின்றிகளானஸீஷிகளையுங் கூடமடலெடுக்கப் பண்ணவற்றாயிருக்கை. அநுகூலரையே யன்றிக்கே, ப்ரதிகூலயான சூர்ப்பநகிபோல் வாரையும் மடலெடுக்கப்பண்ணுகையென்றுமாம். (அநாலோசிதவிசேஷாசேஷலோகசரண்ய,) ஜந்மவ்ருத்தஜ்ஞானங்கள் பாராதே, இருந்ததேகுடியாக சரணவரணார்ஹனவனே. (ப்ரணதார்த்திஹர,) இப்படி யத்யவஸித்தவாஶ்ரிதருடைய வார்த்தியைப்போக்குமவனே. (ஆஶ்ரிதவாத்ஸல்யைகஜலதே,) கீழ்ச்சொன்ன குணங்களெல்லாம் ஒருதலையாகவும், அவற்றையெல்லாம் கீழ்ப்படுத்தும்படியான நிரவதிகவாத்ஸல்யத்தையுடையவனே. "நிகரில்புகழாய்" என்கிறபடியே. ஆகக்கீழ், ஆச்ரயணார்ஹதைசொல்லி, ஆஶ்ரிதருடைய வார்த்தியைப்போக்குமவனென்று சொல்லி, அதுக்க

மூ.—அநவரத விதித நிகில பூதஜாத யாதாத்ம்ய, அஶேஷ சராசர பூத நிகில நியமந நிரத, அஶேஷ சிதசித்வஸ்து ஶேஷிபூத, நிகில ஜகதாதார, அகில ஜகத்ஸ்வாமின், அஸ்மத்ஸ்வாமின், ஸத்யகாம, ஸத்யஸங்கல்ப,

---

வ்யா.—டியான வாத்ஸல்யம் சொல்லித்து. (அனவரதவிதித நிகில பூதஜாதயாதாத்ம்ய,) ஸத்தாயோகி ஸகலபதார்த்தங்களினுடைய வுண்மையை யெப்போதுமொக்க வறியுமவனே. இத்தால், அனுத்தமமானபாத்ரம் என்று நான் என்படி சொல்லவேண்டாவிறே யென்கிறார். (அசேஷசராசரபூத நிகில நியமன நிரத,) ஜங்கமஸ்தாவராத்மகமான ஸகலபதார்த்தங்களுக்கும் ஸர்வகாலத்திலும் ஸாவநியந்தாவானவனே. இத்தாலுனக்கவிதேயமாயிருப்பதொன்றுண்டாகிலிறே எனக்கிழக்கவேண்டுவது. தட்கை. பத்தனுனவனோடு, பந்தகமான ப்ரக்ருதியோடுவாசியற நீயிட்ட வழக்கன்றோவென்கிறார். (அசேஷசிதசித்வஸ்துசேஷிபூத,) ஸகலசேதனாசேதனங்களுக்கும் சேஷியானவனே. இத்தால், என்கார்யம் உன்பேறாகச்செய்யவேண்டும் ஸம்பந்தமுடையவனல்லேயோ வென்கை. (நிகிலஜகதாதார,) பகவத்பாகவதவிஷயங்களில் அபராதம் பண்ணிப்போரும் ஜகத்துக்கும் ஆதாரபூதனே. இத்தாலெனக்கு ஸத்தாதாரகனல்லேயோவென்கிறார். (அகிலஜகத்ஸ்வாமின்,) அபராதத்தைத்தவிர்ப்பித்து, ஆபிமுக்யத்தையுண்டாக்கி, தேவர் திருவடிகளிலே புகிரநிறுத்துகைக்குவேறு நிர்வாஹகருண்டோ. அதனவ (அஸ்மத்ஸ்வாமின்) கீழும் சேஷித்வம் சொல்லித்து; அங்குஸம்பந்தபரம்; இங்குஸம்பந்தானுகுண நியமனபரம். இத்தால், என்னை யிவ்வளவாகப் புகிரநிறுத்தினவன் - நீயல்லேயோவென்கிறார். (ஸத்யகாம,) கீழ்ச்சூர்ணையிலே, யாஸ்ரீதர்க்கனுபாவ்யமான வழியாலே, தனக்கு மினிதானகுணவிபூதியைச் சொல்லித்து; நடுவுஸத்யகாம என்றது, லீலார்த்தமாக ப்ரக்ருதி புருஷகாலங்களை ஸம்ருஹாவிஷயமாக வுடையவனென்கைக்காக. இங்கு ஸத்யகாமனென்கிறது, ஆஸ்ரயிக்குமிடத்தில், இவனிட்டதுகொண்டு வயிறு நிறையவேண்டாதபடி, அவாப்தஸமஸ்தகாம தயாவந்தபூர்த்தியையுடையவனென்கைக்காக. இந்தால், "அகிஞ்சநோநந்யகதி:" என்று, அகிஞ்சனனானவென் கார்யம், பூர்ணனானவுனக்கு பரமன்றோவென்கிறார். (ஸத்யஸங்கல்ப,) கீழ்ச்சூர்ணயிலே, ஸத்யஸம்

மூ.—ஸகலேதர விலக்ஷண, ஸமஸ்தகல்யாண, குணைகதாந, ஸ்ரீமந்

வ்யா.—கல்ப என்றது, அபூர்வமான போக்யங்களை யபேக்ஷிதமாக ஸ்ருஷ்டிக்கக்ஷமனென்கைக்காக. தவே ஸத்யஸங்கல்ப என்றது, லீலைக்கு ஹேதுவான ஸங்கல்பம்-அப்ரதிஹதம் என்கைக்காக. இங்குச்சொன்னது, அகடிதங்களையும், ஸங்கல்பமாத்ரத்தாலே கர்த்தும் க்ஷமன் என்கைக்காக. இத்தால், நித்யஸம்ஸாரியான வென்னையும், நித்யஸூரிகளோடொரு கோவையாக்க நினைத்தால், செய்துமுடிக்க வல்லனல்லையோ நீயென்கிறார். (ஸகலேதரவிலக்ஷண,) சேதனருடையஜீவனம் சொல்லுகிறது. ஸ்வாஜாவேதோகுணதச்ச விலக்ஷண. ஆச்ரிதர்க்கனுபாவ்யமான ஸ்வரூபகுணங்களையுடையவனே. இவைதன்னையாருக்காகப்படைத்தது ; ஸ்வார்த்தமாகவோ வென்கிறார். ஒருவிபூதியாகவனுபவிப்பாரும், அனுபவிப்பிப்பாருமாய்ச்செல்லாநிற்க, ஸ்வார்த்தமாகவோ வென்கிறாரிறே இவரையொழியமல்லாரும் அனுபவித்தாலும், இவரையொழிய வனுபவிப்பித்தாலும், குறையாயிருக்குமிறே. பூர்ணனுபவம் பண்ணுவார்க்கொன்று குறைத்தாலும், நெடும்பாழாய் தோற்றுமிறே. ஆகையாலிவரோடுங்கூட வனுபவித்தாலாய்த்து பூர்ணமாவது. இதுக்கு ஹேதுசொல்லுகிறது மேல். (அர்த்திகல்பக,) தன் தலையாலேயிரந்துகொடுக்குமவனுக்கு, இரந்தார்க்குக்கொடாதொழிகைபோருமோ. அர்த்திப்பார்க்கு,த்தன்னையோழிந்த சிலவற்றைக்கொடுத்துவிடும் பூண்டுபோலேயோ, அர்த்திகளையுமுண்டாக்கி, த்தானே யிரந்துஸகலபலப்ரதனான வுன்னையுமீ தருகிறநீ ; “ யென்னையாக்கியெனக்கே தன்னைத்தந்தகற்பகம்” என்னக்கடவதிறே. அதுபோலெ, தாரும் நரம்புமாயிருக்கையன்றிக்கே, “ ஸர்வாஹ்லாதஹ்ருஷ்டமோஹாசயே” என்னும்படியிறே, யிருப்பது. இரந்துகொடுக்குமத்தனையொழிய, இரந்தார்க்குக் கொடுக்கலாகாதென்றுண்டோ. (ஆபத்ஸக,) ஆபத்துவந்தவாறே, தோழனாயிருக்கை. அதாவது-துணையாயிருக்கை. ஸர்வாக்ஷகனானவனே.அறச்செய்யவேண்டும்படியான வாபத்திலும் தானே துணையாயிருக்கை. மாதாபிதாக்களும், பந்துக்களும், தள்ளிகக்தவையடைக்கும் தசையிலும், “ தமேவசரணம்கதः” என்று, தேவரேதுணையாகை. ( ச்ரீமன், ) இப்படியிருக்கிற வுன்னையும் அசிர்த்து, புருஷகாரபூதையான பி

ஞூ.—நாராயண, ஸஶரண்ய ஶரண்ய, ஸநந்ய ஶரண த்வத்பா தாரவிந்தயுகளம் ஶரணமஹம் ப்ரபத்யே ॥ ஸத்ரயம் ॥

வ்யா—பிராட்டியைப்பார்த்து ரக்ஷிக்கவேணும்.(நாயாயண,) இவள் புருஷகாரமாவதர்க்கு முன்னமே, ஸ்ருஷ்டியர்த்தானு ப்ர வேசத்தாலே, ஸத்தைனயநோக்கினவனல்லேயோ. இத்தால், எனக்கு ஸத்தாதாரகனல்லேயோவென்றபடி. (அசரண்யசரண்ய,) கிம் புனாசரண்யசரண்யத்வம். அதாகிறது இப்படியிருக்கிற தேவரீக்கும், புறம்பாய், பின்னையும் தேவரையொழிய ப்புறம்பு புகலற்றார்க்கு சரண்யனானவனே யென்கிறார். இப்படி யிருப்பாருண்டோ வென்னில்; (அனந்யசரணோஹம்) தயாவிஷயோஹம். அந்த வசரண்யனானவன்றானென்கிறார். "பற்றிலார்பற்ற நின்றானே." (த்வத்பாதாரவிந்தயுகளம் சரணம்ப்ரபத்யே.) இப்படியிருக்கிற நான், நிரதிசயபோக்யமான தேவர் திருவடிகளையே யுபாயமாக வத்யவஸிக்கிறேன்.(அத்ரத்வயம்) சரணம்புகும்போது, ததனுகுணமான ப்ராப்யருசியும், ப்ராபகத்தில் கனகவத்யவஸாயமும் உண்டாகவேண்டுகையாலே, அதினுடைய ஸித்யர்த்தமாகமுதல் சூர்ணையிலே, பிராட்டி திருவடிகளிலே சரணம்புக்கு, இரண்டாம் சூர்ணையிலே, பிராட்டி ப்ரஸாதத்தாலே பெற்றார். அனந்தரமாச்ரயணீயனுவான் - ஆரென்னுமபேக்ஷையிலே, நாராயணனே - யாச்ரயணீயனாக வேண்டுகையாலே, நாரசப்தவாச்யங்களுக்கும் அயனமான திவ்யாத்மஸ்வரூபத்தை, "அகிலஹேய" என்கிற சூர்ணையிலே, சொல்லி, பின்பு, நாரசப்தவாச்யங்களை, "நிகில ஜகதுதய விபவலயலீலே" என்னுமளவாக, அவனுடைய உபயவிபூதிநாதத்வம் சொல்லி, அனந்தரமவனே - ப்ராப்யமும், ப்ராபகமுமென்று அத்யவஸித்து, இப்படி, மேன்மையையுடைத்தான, வஸ்துவை நம்மால் கிட்டப்போமோ யென்னுமபேக்ஷையிலே; இருந்ததே குடியாக யெல்லாருக்கும் கிட்டும்படியான சீலாதிகளைமுன்னிட்டு, பிராட்டிபுருஷகாரகாமாக சரணம்புக்குநின்றார் இவ்வளவால். அனந்தரம், சரணம்புக்கோம் நாமன்றோவென்று, தம்மையசிர்தது, பூர்வர்களுடைய ப்ரக்ரியையை முன்னிட்டு சரணம்புகுகிறார். அனந்தரம், சரணம்புகும்போது, விடவேண்டுவன முன்னாகவிட்டு, வகுத்தவிஷயத்தைப் பற்றவேண்டியிருப்பதோராகாரமுண்டாயிருக்கையாலே, அது,கீழிரண்டிடத்திலும்

மூ.—பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந் । ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி ச க்ருஹாணி ச ॥ ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய

வ்யா—செய்யாமையாலே,அத்தாலே தேனும்குறையுண்டாகிறதோவென்றுபார்த்து, புராதன புருஷர்களுடைய சரணாகதி ப்ரக்ரியையான இதிஹாஸபுராணங்களை முன்னிட்டு,சரணம்புகுகிறார். ஆனால்,கீழ்ச்செய்யாதவற்றுக்கு குறையுண்டாகிறதோவென்னில்;குறைவில்லாமையேயன்று; இத்தாலேலற்றமுண்டாகிறது, எங்ஙனேயென்னில்; த்வயத்தாலே, த்யாகபூர்வகமாக ஸ்வீகரிக்கவேண்டித்தாகில், ஸர்வாதிகாரமாகமாட்டாது. ஆகையால் ஏற்றமுண்டாகிறது.பூர்வபுருஷர்களுடைய ஹ்ருதயம்-வகுத்தவிஷயத்தில், ஸ்வரூபாநுரூபமாக சரணாகதியைப்பண்ணுமதொழிய, இவன் விடவேண்டுவதுண்டோ, பற்றவேண்டுவதுண்டோ என்றுமிருத்து இருப்பது. ஈச்வரவிஷயீகாரத்துக்கு, ஸம்ஸாரபயபீதனாய்க்கொண்டு திருவடிகளிலே சரணம்புகுவதேயமையும்; இவர் ப்ராப்யருசி-செய்விக்கமாட்டித்தில்லாமையாலே, ருசிப்ரேரிக்கச்செய்வர். ஆகையால், இவர்செய்யாததெல்லாம் குறையாகக்கடவது. இவர்தாம், இதுக்கு அவ்வருகுசரணம் புகக்காணமையாலே, மீண்டாரத்தனையல்லது, அமையுமென்று மீண்டாரல்லர். ஆகையாலே சரணம்புகுகிறார் - ( பிதரம்மாதரமித்யாதி. ) பூர்வார்த்தத்தாலே, சேதனரையும், உத்தரார்த்தத்தாலே அசேதனங்களையும் சொல்லுகிறது. (ஸர்வதர்மான்) என்று, உபாயாந்தரமான கர்மயோகாதிகளைச்சொல்லுகிறது. ( ஸர்வகாமாம்ச்சஸாக்ஷரான் ) என்று, உபேயாந்தரமான ஐச்வர்யகைவல்யங்களைச் சொல்லுகிறது. ( ஸந்த்யஜ்ய) என்றது-ஸவாஸனமாகவிட்டென்றபடி. ஸர்வதர்மாம்ச்ச-ஸர்வகாமாம்ச்சஎன்றிரண்டையும் கூடவெடுத்து, விடச்சொல்லுகையாலே, உபேயாந்தரங்கள-ஸ்வரூபநாசகமாமோபாதி, உபாயாந்தரங்களும், ஸ்வரூபநாசகமென்று கருத்து. இவற்றை ஸ்வரூபநாசகமென்னலாமோவென்னில்; அவற்றிலஸ்வயம் ப்ரயோஜனமாக விழுகையேஸ்வரூபம். இத்தையொழிந்ததெல்லாம் ஸ்வரூபநாசபர்யாயம். இவைதான்-ஸ்வரூபோஜ்ஜீவனமாகிறதில்லையோவென்னில்; இவனிவைதன்னை - ஸாதனமாக்கிறுப்போலே, புறம்பேயொன்றை - ப்ரயோஜனமாக்காதே, நம்மையே ப்ரயோஜன

மூ.—ஸவஹகாமோஂஸ்ஸஹாகஷராநு । லோகவிக்ரா
ஷவானள ஶரணஜெ வ்ரஜஂவிஹோ ॥

வ்யா.—மாக்கப்பெற்றேமேயென்னு மீச்வரன் நினைவாலே யுஜ்ஜீவனமாகிறது. ப்ரயோஜநாந்தரத்துக்கு மடியேற்பாரையும் "உதாராः" என்னுமவன் ஸ்வபாவத்தாலே யுஜ்ஜீவனமாகிறதித்தனை. மேல் பற்றப்படும் விஷயம்சொல்லுகிறது (லோகவிக்ராந்த சரணௌசரணம்ப்ரபத்யேऽஹஂவிபோ.) சீலாதிகுணயுக்தனுமாய், வகுத்த ஸ்வாமியுமாய், ஜ்ஞானசக்த்யாதி குணபூர்ணனுமான உன் திருவடிகளையேயுபாயமாகப்பற்றுகிறேனென்கிறது. (பிதரம்மாதரம்) "மாத்ருதேவோபவ, பித்ருதேவோபவ" என்று ஈச்வரனே பாதி,மாதாபித்ருநுவர்த்தனத்தையும் உபாஸனங்கமாக சாஸ்த்ரம் விதிக்கையாலே, உபாயாந்தரஸஹகாரிகளுமாய், உள்ளதனையும் அனுவர்த்தித்துவிடுகையன்றிக்கே, இவர்களுடைய வியோகம்அஸஹ்யமாயிருக்கையாலே, ஸ்வயம் ப்ரயோஜனமுமா யிருப்பர்கள்.(தாரான்) ஸ்த்ரீயும்-ஸஹதர்மசாரிணியாகையாலே, உபாயாந்தரஸஹகாரியுமாய், அபிமதவிஷயமாகையாலே யுபேயாந்தர்பூதையுமாயிருக்கும். ( புத்ரான் ) புத்ரஹீனனானபோது, புத்என்கிற நரகதர்சனம் பண்ணவேண்டுகையாலே, புத்ரோத்பாதனம். "புன்னாம்னோநரகாத்த்ராயதஇதிபுத்ரः" என்கிறபடியே,அந்தநரகதர்சனத்துக்கடியான பாபவிமோசன ஹேதுவாகிற முகத்தாலே யுபாயாந்தர ஸஹகாரியுமாய், அவ்வளவன்றிக்கே, தத்வியோக மஸஹ்யமாயிருக்கையாலே யுபேயமுமாயிருக்கும். (பந்தூன்) அவர்களாகிறார் - இவனைக் குடிப்பழியாக வர்த்தியாதபடி நியமித்து, நல்வழிநடத்து மவர்களாகையாலே, உபாயாந்தர ஸஹகாரிகளுமாய், இன்ன பெருங்குடியாட்டத்திலே பிறந்தான் என்கிற செருக்காலே யுபேயபூதருமாய், இருப்பர்கள். (ஸகீன்) தோழனும், இவனுக்கு ஹிதைஷியாய், ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கையாலே யுபாயாந்தரஸஹகாரியுமாய், அபிமதனாகையாலே யுபேயபூதனுமாயிருக்கும். ( குரூன். ) அவர்களாகிறார் - உபேயப்ரதிபத்யர்த்தமாக உபாயோபதேஷ்டாக்க ளாகையாலே, உபாயாந்தர ஸஹகாரிகளுமாய், ஹிதபரராகையாலே, யுபேயபூதருமாயிருப்பர். 'ரத்னம்' தொடக்கமானவையும், உபாயாந்தரங்களுக்கு இதிகர்த்தவ்யதயா ஸஹகாரிகளாகையாலே யுபாயாந்தர

மூ —த்வமேவ மாதா ச பிதா த்வமேவ

---

வ்யா.—ஸஹகாரிகளுமாய், அவற்றை யழிய மாறியும் விநியோகிக்கலாமாகையாலே யுபேயமுமாயிருக்கும். (ஸர்வதர்மாம்ச்ச) தர்மசப்தத்தாலே யுபாயரூபமான கர்மயோகாதிகளைச் சொல்லுகிறது. ஸர்வசப்தத்தாலே அதிகாரிஸம் பத்தி தர்மங்களைச் சொல்லுகிறது. (ஸர்வகாமாம்ச்ச) என்று, புத்ரபச்வன்னாதி தொடக்கமாக, ஸ்வர்கைச்வர்யம் நடுவாக, ப்ரஹ்மைச்வர்ய பர்யந்தமான வற்றையெல்லாம் சொல்லுகிறது. (ஸாக்ஷராந்.) என்றது - கைவல்யத்தை. (ஸந்த்யஜ்ய) லஜ்ஜாபுரஸ்ஸரமாகவிட்டு. (லோகவிக்ராந்தசரணௌ) தொடங்கி பற்றுகிறவிஷயம். வரையாதே வைத்த திருவடிகளாகையாலே, ஸௌசீல்யம் சொல்லுகிறது. உறங்குகிற ப்ரஜையைத் தாய்முதுகிலே யணைத்துக்கொண்டு கிடக்குமாப்போலே, தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக விடமாட்டாதே; விமுகரானார்தலையிலும், திருவடிகளை வைக்கையாலே, வாத்ஸல்யம் சொல்லுகிறது. (தே) என்று வகுத்த சேஷித்வம் சொல்லுகிறது. (விபோ) என்கையாலே, ஜ்ஞானசக்த்யாதி குணபூர்த்தி. இத்தால் ஸுஹ்ருச்சப்தவாச்யமு மிதிலேயநுஸந்தேயம். ஆகவித்தனையும் நாராயண சப்தார்த்தம். தே, என்கிற விடத்தில் ஸ்வரூபானுபந்தியான லக்ஷ்மீஸம்பந்தமு மனுஸந்தேயம். இத்தால், புருஷகாரபாவம் சொல்லுகிறது. (சரணௌ) என்கையாலே, விக்ரஹயோகம் சொல்லுகிறது. (சரணம்) என்கையாலே, உபாயபாவம் சொல்லுகிறது. (அவ்ரஜம்) அத்யவஸித்தேன் என்றபடி - ஆகவிச்லோகங்களாலே, விடுமவற்றைவிட்டு, பற்றுமவற்றைப் பற்றிநின்றது. ஆனால், கீழ்விட்டவை யெல்லாம் இழவேயாகிறதோவென்னில்; அங்ஙனேயிருப்பதொரு ஸாபேக்ஷதையுண்டோ, ஸர்வப்ரகார பரிபூர்ணவிஷயத்தைப் பற்றினவனுக்கு. ஆகையாலே, கீழ்விட்டவையெல்லாம் ஈச்வரனே யென்கிறார். (த்வமேவமாதாச) பிறந்தபின்பு ஹிதபரனான பிதாவைப்போலன்றியே, கர்ப்பவாஸமே தொடங்கி ரக்ஷித்துப்போருமவளிறே மாதா- இத்தால் இவர் நினைக்கிறதென்னென்னில் ; மேல் ஸ்ருஷ்டிக்கைக் குறுப்பாக, முதலழியாதபடி வயிற்றிலே வைத்து ரக்ஷித்துப் போந்தவனென்கிறார். (பிதாத்வமேவ) மாதாவுக்கு முன்னே, பிறக்கைச்சுட்டி கூஷிபண்ணுவான் - பிதாவிறே. இத்தால், “ வ-ஞர்

மூ.—த்வமேவ பந்துஶ்ச குருஸ்த்வமேவ । த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ த்வமேவ ஸர்வம் மம தேவதேவ ॥ பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்யஶ்ச குருர்கரீயாந் ।

வ்யா—வஜ'' என்றத்தை நினைக்கிறது. (த்வமேவபந்துச்ச) பந்துவாயிருப்பார், இவன் வழிகெட வர்த்தியாதபடி நியமித்து, நல்வழியே நடத்துமவரிறே. அப்படியே, ஞன் வழிகெடவர்த்தியாதபடி, யந்தாராத்மதயாவிருந்து, நியமித்து, நல்வழியாக்கும் பந்துவும் நீயே. (குருஸ்த்வமேவ.) யெனக்கஜ்ஞாதஜ்ஞாபனம்பண்ணு மாசார்யனும் நீயே. "அறியாதனவறிவித்தவத்தா" என்னக்கடவதிறே. ஆசார்யரில் வைத்துக்கொண்டு, ப்ரதமாசார்யனுவானீச்வரனிறே. "லக்ஷ்மீ நாதஸமாரம்பாம்" என்னக்கடவதிறே. "இசைவித்தென்னை" என்கிறபடியே, முதலடியிலே ருசிஜனகனுகையாலே, ப்ரதமாசார்யனென்னக் குறையில்லையே. (த்வமேவவித்யா) உபதேசித்த ஜ்ஞானமும்-நீயே. அதாவது - "ஞானக்கலைகளுக்கெல்லா மாவியுமாக்கையுந்தானே" என்கிறபடியே, ஞானத்தினுடைய ஸத்தாதிகள் - அவனதீனமாகையாலும், ஞானப்ரதிபாத்யன் அவனுகையாலும், ஞானமும் நீயே யென்கிறது. (த்ரவிணம்த்வமேவ) த்ரவிணமாகிறது - த்ரவ்யம். அதாவது - போகத்துக்குபகரணமாயிருக்கை. இத்தால், போகோபகரணமான பரபக்த்யாதிகளும் - நீயே யென்கிறுர். அன்றிக்கே, "யஜுஷியம்" என்கிறபடியே, ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும்-நீயே யென்கிறுராகவுமாம். (த்வமேவஸர்வம்.) சொல்லிச்சொல்லாதவையெல்லாம் நீயே (மமதேவதேவ.) ஸர்வத்தையும்விட்டுன்னையே பற்றினவெனக்கு, விட்டவையுமெல்லாம் அயர்வறுமமரர்களதிபதியான நீயென்கிறுர். இதுதான் உமக்கொருவருக்குமேயோவென்னில்; ஸர்வஸாதாரணமென்கிறுர். (பிதாஸிலோகஸ்யசராசரஸ்ய) ஸர்வலோகங்களிலுமுண்டான ஜங்கமஸ்தாவராத்மகமான ஸகலபதார்த்தங்களுக்கு முத்பாதகனுனவனே. (த்வமஸ்யபூஜ்யச்ச) ஆகையாலே, ஸர்வத்துக்கும் பூஜ்யன் நீயல்லையோ. (குருர்கரீயான்.) ச்ரேஷ்டனுன வாசார்யனும் நீயே. கீழ்ச்சொன்ன பூஜ்யதை,பித்ருத்வத்தளவிலே நிற்க்குமது. இத்தால், "மரியாதுஷ்யஷீஹ:விதா" என்று, பூஜ்யதையினெல்லை சொல்லுகிறது.

மூ.—ந த்வத்ஸமோஸ்த்யப்யதிக: குதோந்யோ லோகத்ரயேப்யப்ரதிமப்ரபாவ ॥ தஸ்மாத் ப்ரணம்ய

வ்யா.—( நத்வத்ஸமோஸ்த்யப்யதிக:குதோந்ய: ) ஆகையாலே, ஸ்ருஷ்டிக்கிற ஸமஸ்தவஸ்துக்களிலும், உனக்குஸத்ருசர் இல்லையென்றால், அதிகர்இல்லையென்னுமிடம் சொல்லவேணுமோ, “ ஒத்தார்மிக்காரையிலையாய” இறே. ( லோகத்ரயேப்யப்ரதிமப்ரபாவ.) ஆகையாலே த்ரிவிதசேதனரிலும் காட்டிலொப்பில்லாத ப்ரபாவத்தையுடையவனே. அனந்தரம், கீழ், சரணம் புக்கவதுக்கு க்ஷாமணம்பண்ணுகிறார். க்ஷாமணம் பண்ணுகிறது, ஆருடையஹ்ருதயத்தாலே யென்னில்; ஸ்வஹ்ருதயத்தாலே. அதெங்ஙனேயென்னில், அநாதிகாலம் அபராதத்தைப்பண்ணிக் கூடு பூரித்தவன், இன்றாக வாபிமுக்யம்பண்ணினனேயாகிலும், “ ஸிவேஷ்ணுஷவிவத்ஸல” னானவன்படிபார்த்தால், இவனைக்கைகொள்ளுகைக்கொருகுறையுமில்லை. ஆகிலும், பதிவ்ரதையாயிருப்பாள், நெடுநாள் வ்யபிசரித்து, பின்பு, பர்த்தாவானவன் - பழியாளன் என்கிறவிதுவே - யாலம்பனமாகவந்து, என்னை ரக்ஷிக்கவேணுமென்று முன்னே நின்றால், வருகைதானே - யபராதம், அதுக்குமேலே, என்னை ரக்ஷிக்கவேணுமென்கையாவது - அபராதத்துக்குமேலெல்லையாய், ஸ்த்ரீத்வஹாநியுமாயிருக்குமிறே. அப்படியே, இவனு மநன்யார்ஹசேஷபூதனுமாயிருந்துவைத்து, கனக்க வபராதத்தைப் பண்ணிப்போந்து, இன்றுவந்து சரணம் புகிறுகையாவது - அபராதத்துக்கு மேலெல்லையுமாய், சேஷித்வஹாநியுமாயிருக்கக்கடவதிறே. ஆனால், சரணம் புகிறுகை, அபராதமானால், அதுபண்ணுவானெனென்னில்; “ தமேவசரணம்கத:” என்று புறம்புபுகலில்லாமையாலே சரணம்புகவும்வேணும். பூர்வவ்ருத்தத்தைப்பாரா, பண்ணின விதுவும் - அபராதமென்று பயஹேதுவாகையாலே, க்ஷாமணம் பண்ணவும்வேணும். (தஸ்மாத்) த்வமேவேத்யாதிப்படியே, நீயே ஸகலவித பந்துவுமாகையாலே, செய்த குற்றம் பொறுக்கும்போது, ஸகலவிதபந்துவுமாகவேணும்போலே காணும். அதுதன்னிலும், ஒருமுறையேயாய், குற்றமாய் தலைக்கட்டுகையன்றிக்கே, ஸகலவித பந்துவுமாயிருக்கையாலே, யிவனுக்குச் செய்யலாகாததில்லை. அவனுக்குப் பொறுக்கலாகாதது மில்லையென்கை, ( ப்ரணம்ய ) மானஸமான தண்டன்

மூ.—𑌪𑍍𑌰𑌣𑌿𑌧𑌾𑌯 𑌕𑌾𑌯𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌯𑍇 𑌤𑍍𑌵𑌾𑌮𑌹𑌮𑍀𑌶𑌮𑍀𑌡𑍍𑌯𑌮𑍍 ।
𑌪𑌿𑌤𑍇𑌵 𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌸𑌖𑍇𑌵 𑌸𑌖𑍍𑌯𑍁𑌃
𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 𑌦𑍇𑌵 𑌸𑍋𑌢𑍁𑌮𑍍 ।௯॥

வ்யா.—(ப்ரணிதாயகாயம்) காயிகமான தண்டன். இரண்டையுஞ்சொல்லுகையாலே, வாசிக மர்த்தாத்ஸித்தம். ஆகத்ரிவித கரணங்களாலும் சரணம் புக்கபடி-எதுக்காகவென்னில்; (ப்ரஸாதயே) ப்ரஸாதிப்பிக்கைக்காக. ஆரையென்னில்;(ஈசமீட்யம்-த்வாம்.) சேஷியுமாய், ஸ்துத்யனுமாயிருந்துள்ள வுன்னை. ஆரென்னில்; (அகம்) அனன்யார்ஹ சேஷபூதனுமாயிருந்துவைத்து, அபராதத்தைப் பண்ணிப்போந்து, இன்றுவந்து சரணம்புக்க நான், நினைத்தபடி செய்யப்புக்கால், நிவாரகரில்லாமைக்காக வுடையவனென்கிறது. ஸ்துதிக்கவேண்டும் விஷயத்தை, த்வேஷித்துப்போந்தேனென்று,தம்முடைய விழவுதோன்ற ஈட்யனென்கிறார். பொறுக்கைக்கு ஹேதுசொல்லுகிறது மேல் ( பிதேவபுத்ரஸ்ய ) புத்ரன்பண்ணின குற்றத்தை, பிதாபொறுக்குமாப்போலவும். ( ஸகேவஸக்யுஃ ) தோழன்செய்த குற்றத்தைத் தோழன் பொறுக்குமாப்போலவும். (ப்ரியஃப்ரியாயாஃ) ப்ரியையினுடைய குற்றத்தை ப்ரியனானவன் பொறுக்குமாப்போலவும். ஸந்திரார்ஷிஃ. ( ஸோடும் ) பொறுக்கைக்கு ஸர்வவிதபந்துவுமா யிருக்கையாலே, ( தேவ - அர்ஹஸி. ) தேவரும் அப்படிக்கர்ஹர். ஆக முதல் சூர்ணையிலே, ப்ராப்யருசிக்கும், ப்ராபகவ்யவஸாயத்துக்குமாகப் பிராட்டி திருவடிகளிலே, சரணம்புக்கு, இரண்டாம் சூர்ணையிலே, பிராட்டி ப்ரஸாதத்தாலேபெற்று, அனந்தரமாச்ரயிக்கைக்குறுப்பான வுபயவிபூதிநாதத்வம் சொல்லி, அனந்தரமாச்ரயிக்கைக்குத்துணையான சீலாதி குணங்களை முன்னிட்டு, பிராட்டி புருஷகாரமாகத் தாம்சரணம்புக்கு, அனந்தரம், பூர்வர்களுடைய ப்ரக்ரியையாலே சரணம்புக்கு,அனந்தர மிதிஹாஸப்ரக்ரியையாலே சரணம்புக்கு, அனந்தரம், கீழ்விட்டவையடைய விச்வாஸனையாகப்பற்றி, இதுதான்-என்னளவேயன்று, ஸகலசேதனர்க்கு மொக்குமென்று, கீழ்பண்ணின ப்ரபத்திக்கு க்ஷாமணம் பண்ணினார். ஆகவிவ்வளவாலும், பூர்வகண்டார்த்தத்தை யனுஸந்தித்தாராய்நின்றார். இனியுத்தரகண்டார்த்தத்தை யருளிச்செய்கிறார். அதில்,அனிஷ்டநிவ்ருத்தியுண்டானாலல்லது இஷ்ட ப்ராப்தி

மூ—மநோவாக்காயை ரநாதிகால ப்ரவ்ருத்த
அநந்த அக்ருத்யகரண க்ருத்யாகரண பகவத
பசார பாகவதாபசார அஸஹ்யாபசார
ரூப நாநாவித அநந்தாபசாராந்,

வ்யா.—கிடையாமையாலே, முந்துற நமச்சப்தார்த்தத்தையருளிச்செய்கிறார். அதுதனக்கு தேஹாத்மாபிமானம் துடக்கமாக, கைங்கர்யத்தில் மமதாபுத்தியீறாக, நடுவுள்ள விரோதிவர்க்கத்தையடையப்போக்கித் தரவேணுமென்றிறே-அர்த்தமாக நிர்வஹித்துப்போருவது. அதுதான் - ஸகலகர்மக்ஷயத்தாலே யாய்த்துப்பிறப்பது. ஆகையாலே, முந்துறகர்மத்தையருளிச்செய்கிறார். நம்மாழ்வார், "பொய்நின்றஞானமும்" என்று, அவித்யையைமுதலாக வருளிச்செய்தார். இவர், கர்மத்துக்கடி-அஜ்ஞானம், அஜ்ஞானத்துக்கடி-தேஹஸம்பந்தம், என்று கர்மத்தை முந்துறவருளிச்செய்கிறார். ஆழ்வாருக்கு, ஸ்வாநுபவமாயிருக்கையாலே, தேஹாத்மாபிமானத்வாரா நின்று, அஹங்காரம் நலிகிறப்ரகாரத்தாலே, அவித்யை முன்னாக வருளிச்செய்தார்; இவர்க்கு ஸ்வாநுபவமாயிருக்கச்செய்தே, தர்சனத்துக்கு, கர்மப்ராதாந்யம் சொல்லிப்போருவதொரு நிர்பந்தமுண்டாகையாலே, அதினுடைய ஸ்திதிக்குறுப்பாகவும், மாயாவாதி, அவித்யாநிவ்ருத்தி - மோக்ஷம் என்று, அவித்யையை - ப்ரதானமாகச் சொல்லுகையாலே, அதினுடைய ப்ரதிக்ஷேபார்த்தமாகவும், இவர் கர்மம்முதலாக வருளிச்செய்கிறார். அவர், காரணபரம்பரையை யருளிச்செய்தார்; இவர், கார்யபரம்பரையை யருளிச்செய்கிறார். ॥ சூ. ॥ ( மனோவாக்காயை: ) கர்மத்துக்குப் பரிகாரமேதென்றுபார்த்தால், மனோவாக்காயங்கள். இவைதான் - ஈச்வரனைலபிக்கைக்கும், அவனையிழந்து அனர்த்தப்படுகைக்கு முடலாயிருக்கும் - "மநஏவமநுஷ்யாணாம்" இறே. (அநாதிகாலப்ரவ்ருத்த) அநாதிகாலம் பண்ணிப்போந்த. ( அனந்த ) இவைதான் - அளவிறந்திருக்கை. இவைதான் - இருக்கும்படியென்னென்னில்; ( அக்ருத்யகரண ) இதுவென்ன. (க்ருத்யாகரண) இதுவென்ன. ( பகவதபசார ) இதுவென்ன. ( பாகவதாபசார ) இதுவென்ன. (அஸஹ்யாபசார) § இதுவென்ன. (நாநாவித) இப்படி பகுவிதமாய். ( அனந்தாபசாரான் ) இவற்றிலோரோவிதமே - அனந்தமாய், இப்படியுள்ளவைதான் - அஸங்

§ ரூபஎன்று சில மூலகோசங்களில்க் காண்கிறது.

மூ.—க்ருதாஂஶ்ச க்ரியமாணாந், கரிஷ்யமாணாம்ஶ்ச ஸர்வாநஶேஷத꞉ க்ஷமஸ்வ ||௭||

வா.—யாதமாயிருக்கை. இதிறே - அபசாரத்தினுடையவனல்பதையிருந்தபடி. "யஜ்ஞாகல்ப நியதாநாதீநவேயூநாஶம் தத்கிஜ்ஷம் வ்ரஜதிஜந்தாமிஹாக்ஷணார்த்தே." என்று, நூறாயிரம் ப்ரஹ்மகல்பம் கூடினாலும் அனுபவித்துமுடிக்கவொண்ணாத பாபத்தையிறே, இச்சேதன னொரு க்ஷணார்த்தத்திலே பண்ணுவது. (ஆரப்தகார்யான்) பலப்ரதானத்திலொருப்பட்டவை. (அநாரப்த்தகார்யான்) ப்ரபல கர்மநிரோதானத்தாலே யவஸரப்ரதீக்ஷமானவை. (க்ருதான், க்ரியமாணாம், கரிஷ்யமாணாம்ச்ச) காலத்ரயத்திலுள்ளவையையும். (ஸர்வான்) இவைதான் - சிலவற்றைச்சொலலித்தித்தனை. என்றால்ச்சொல்லி முடிக்கவொண்ணாத வெல்லாபாவங்களையும். (அசேஷத꞉ க்ஷமஸ்வ.) ஸவாஸனமாகப் பொறுத்தருளவேணும். அக்ருத்யகரணமாவது - சாஸ்த்ரவிருத்தமாமவற்றை யனுஷ்டிக்கை. க்ருத்யாகரணமாவது - சாஸ்த்ரவிஹிதமாமவற்றை யநுஷ்டியாதொழிகை. "ஸந்த்யாதீவஜோஷிவஜ" என்று, சக்தனாயிருக்க அனுஷ்டியாதொழிந்தால், தோஷம் - கனத்திருக்குமிறே. பகவதபசாரமாவது - அபூ துபடி, சாத்துப்படிக்கர்ஹமா மவற்றை விச்சேதம்பண்ணுகை. அதாவது- அவற்றைத்தான்வாங்கி ஜீவித்தல், பிறர்க்குபகரித்தல், அத்தாலே ஜீவிப்பார்பக்கலிலே, யாசிதமாயாதல், அயாசிதமாயாதல் பரிக்ரஹித்து ஜீவித்தலும், அர்ச்சாவதாரத்திலுபாதான ஸம்ருதியும், ஈச்வரன்பக்கல், தேவதாந்தரங்களோடு ஸஜாதியதாபுத்தியும், அவனதான வஸ்துக்களில் மமதாபுத்தியும். இதுவும் - அக்ருத்யகரணங்களிலொன்றாயிருக்க, பிரியவெடுக்கவேண்டித்து, இதனுடைய க்ரௌர்யாதிசயமிருந்தபடி. பாகவதாபசாரமாவது - அர்த்தகாமாபிமான நிமித்தமாக, ஸ்ரீ வைஷ்ணவர்களோடு விவாதம்பண்ணுகையும், ஜந்மவ்ருத்தாதிகளால், அவர்களைக்குறைய நினைக்கையும், விகலகரணர்பக்கல், க்ஷேபோக்திபண்ணுகையும். அஸஹ்யாபசாரமாவது - நிர்நிபந்தநமாக பகவத்பாகவத ஸம்ருத்தியைக் கண்டால், பொறுக்கமாட்டாதே, மூட்டிக்கொள்ளுதல், நான்றுகொள்ளுதல் செய்கை. ஸ்ரீ வைஷ்ணவனென்னுமிதுவே-ஹேது

மூ.—அநாதிகாலப்ரவ்ருத்த விபரீதஜ்ஞாந ஆத்மவி
ஷயம், க்ருத்ஸ்நஜகத்விஷயஞ்ச விபரீதவ்ருத்தஞ்ச

---

வ்யா.—வாக ப்ரத்வேஷம் பண்ணுகை. புத்ரவாத்ஸல்யம் செல்லாநிற்க, திருநாமம்சொன்னதுவே-ஹேதுவாக, அக்னிதாஹம் முதலான ஹிம்ஸையைப்பண்ணினுநிறே யொருவன். சிசுபாலாதிகள் பண்ணினவை- பகவதபசாரம். ராவணாதிகள் பண்ணினவை - பாகவதாபசாரம். ஹிரண்யாதிகள் பண்ணினவை - அஸஹ்யாபசாரம்.॥எ॥(அநாதிகாலப்ரவ்ருத்த) கீழ், "பொல்லாவொழுக்கும்" என்கிறபடியே, அக்ருத்யகரணாத்யபராதங்களைப் பொறுத்தருளவேணுமென்றார் ; இங்கு, அதுக்கடியான விபரீதவ்ருத்தத்தாலுண்டான வபராதத்தைப் பொறுத்தருளவேணுமென்கிறார். வ்ருத்தஹானி-கீழேசொல்லித்திலையோவென்னில்; அங்கு, அக்ருத்யகரணக்ருத்யாகரணமென்றது - சாஸ்த்ரவிருத்தமானவற்றை யநுஷ்டிக்கையும், விஹிதாநுஷ்டானம் பண்ணுதொழிகையுமாகிற வ்ருத்தஹாநி-சொல்லித்து; வேதாந்தவிஷயஜ்ஞானுபாவத்தால் வரும் சிலவ்ருத்தஹாநிகளுண்டு; அவற்றையாய்த் திங்குச்சொல்லுகிறது. ஆகையாலே தோஷமில்லை. (அநாதிகால ப்ரவ்ருத்த) அநாதிகாலம்பண்ணிப்போந்த. (விபரீதஜ்ஞானம்) இது - ஸ்வரூபஸ்பர்சியன்று. ஆனு லொருநாளளவிலே வந்தேறித்தோவென்னில்; அங்ஙன்சொல்லவொண்ணாது, அநாதியென்னு மித்தனை. ஸ்வரூபஸ்பர்சியென்னலாம்படியிறே - யிதினநாதித்வமிருப்பது. பகவத்ப்ரஸாதத்தாலே, யொருநாள்வரையிலே கழியக்காண்கையாலே, வந்தேறியென்றறிந்தவித்தனை. விபரீதஜ்ஞானமாவது - ஓரர்த்தத்திலர்த்தாந்தரபுத்திபண்ணுகை. இதுக்கு விஷயமேதென்னில்; (ஆத்மவிஷயம் க்ருத்ஸ்நஜகத்விஷயம்ச) ஆத்மவிஷயமாகவும், க்ருத்ஸ்நஜகத்விஷயமாகவும். ஆத்மவிஷயமான விபரீதஜ்ஞானமாவது. தேஹாத்மாபிமானம். க்ருத்ஸ்நஜகத்விஷயமான விபரீதஜ்ஞானமாவது - தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவர சரீரங்களிலே, தத்தத்புத்திபண்ணுகை. (விபரீதவ்ருத்தம்ச) அதாவது - விருத்தமாக வநுஷ்டிக்கை. க்ருத்ஸ்நஜகத்விஷயமான விபரீதவ்ருத்தமாவது - ஒருவன் தனக்கோரபகாரம்பண்ணினால், ஸ்வகர்மபலமென்றும், தத்தத்கர்மானுகுணமாக வீச்வரன்-ப்ரவர்த்தகனென்றும் நினையாதே, நிமித்தமாத்ரமான சேதனனை-ஸ்வதந்த்ரனாக

மூ.-அஶேஷவிஷய ஐஶ்வர்யாதி புருஷார்த்தங்களை ... (Grantha-script verse line, not reliably legible)

வ்யா.—புத்திபண்ணி, அவன்செய்தானென்று, அவனுக்கபகரிக்கை பாரதந்த்ரனானதன்னை-ஸ்வதந்த்ரனென்று நினைத்து, அவன்விஷயத்திலபகரிக்கை-ஆத்மவிஷயமான விபரீதவ்ருத்தமாவது. (அசேஷவிஷயம்) ஐச்வர்யாதிபுருஷார்த்தங்களை யபேக்ஷிக்கையும்.இப்படி ஸர்வவிஷயமாகவும்; (அத்யாபி) முன்புசெய்தவற்றையும். (வர்த்தமானம்) இப்போதுசெய்கிறவற்றையும். (வர்த்திஷ்யமாணஂச) மேல்ச்செய்யப்புகுகிறவற்றையும். (ஸர்வம்க்ஷமஸ்வ.) அஜ்ஞானகையாலே, யென்னாலறிந்து தலைக்கட்டவொண்ணாது; ஸர்வஜ்ஞரான தேவரறிந்தவெல்லாவற்றையும் பொறுத்தருளவேணும். அ॥ (மதீயாநாதி) கீழ், கர்மத்தையும்சொல்லி, அதுக்கடியான வஜ்ஞானத்தையும்சொல்லி நின்றார். இவ்வஜ்ஞானத்துக்கடியான தேஹஸம்பந்தத்தைக்கடத்தி யருளவேணுமென்கிறாரிங்கு. கீழ், "க்ஷமஸ்வ" என்றார். இங்கு, "தாரய" என்கிறார். இங்ஙனேவேண்டுவானென்னென்னில்; கர்மமும், ஜ்ஞானமும், நிக்ரஹரூபமாய்க்கொண்டு, அவன்றிருவுள்ளத்திலே கிடப்பதொன்றாகையாலே, அவன் க்ஷமிக்கநசிக்கும்; இவ்வசித்துத்தான் - நித்யமாகையாலே, நசிக்கவென்பதொன்றில்லை. இனி, இதினின்றும் கழலுகையேயாய்த்துள்ளது. ஆகையாலே, "தாரய" என்கிறார். ஈச்வரவிபூதியையழிக்கவேணுமென்றன்றே - யிவருக்குக்கருத்து; இதினின்றும் தம்மையெடுக்கவிறே. பிரிக்கவென்னுதல், விடுவிக்கவேன்னுதல், செய்யலாவது - ஸ்வரூபம் தோற்றக்கிடக்கிலிறே. ஸ்வரூபம்நேராக நசித்து, தேஹமாய்க்கிடக்கையாலே, எடுக்கவேணுமென்கிறார். பாலும் நீரும் தன்னிலேகலந்தால், பாலிது, நீரிது, என்று, பிரித்துக்காணவொண்ணாதபடியும், அதொருபதார்த்தத்தின் கைப்பட்டவாறே,ஸாரமானபாலைக்ரஹித்து, ஜீர்ஷமான நீரைக்கழிக்குமாப்போலே,யொருஸர்வசக்தி பிரித்தல், இல்லையாகில் நசித்தல்போலேகாணுமுள்ளது "தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" என்றும், "மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே" என்றும், நான்பண்ணின மாயை-ஒருவராலுங் கடக்கவொண்ணாதென்றும், யென்னையே பற்றிக்கடக்கவேணுமென்றும் அருளிச்செய்கையாலே, நீயேகடத்தியருளவேணுமென்கிறார். ( அநாதிகர்மப்ரவாஹப்ரவ்ருத்தாம், )

மூ.—பகவத்ஸ்வரூப திரோதாநகரீம், விபரீதஜ்ஞாநஜநநீம், ஸ்வவிஷயாயாஶ்ச போக்யபுத்தேர்ஜநநீம், தேஹேந்த்ரியத்வேந போக்யத்வேந ஸூக்ஷ்மரூபேண சாவஸ்திதாம்,

---

வ்யா.—அநாதிகாலம் பண்ணிப்போந்த கர்மபரம்பரையாலேயுண்டானதாய். இதுதான் - பிறருண்டாக்கினதொன்றன்றிக்கே, பகவத்ப்ரஸாதமடியாக வந்ததொன்றுமன்றிக்கே, ( மதீய ) யென்றாலே ஸம்பாதிக்கப்பட்டதொன்றென்கை. இதுசெய்யுங்கார்யமென்னென்னில் ; ( பகவத்ஸ்வரூபதிரோதானகரீம், ) வகுத்த சேஷியான தேவருடைய ஸ்வரூபத்துக்குத் திரோதானத்தைப் பண்ணக்கடவதாய். அதாவது - மறைக்கை. பகவத்ஸ்வரூபத்தை, யிதுமறைக்கையாவது-என்னென்னில்; ஸ்ரீயப்பதியாய், புருஷோத்தமனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், உபயவிபூதிநாதனாயிறே யீச்வரனிருப்பது. இப்படியிருக்க, குத்ருஷ்டிமுகத்தாலே, நிர்விசேஷசின்மாத்ரமா யிருப்பதொருவஸ்துவுண்டு. அல்லாதவையெல்லா மபாரமார்த்தமென்னும்-மாயாவாதி. சிதசிதீச்வரதத்வங்கள் மூன்றுமுண்டு; அதில், சிதசித்துக்களிரண்டும்-ஈச்வரசேஷமாய், ஈச்வரன்-அவற்றுக்கு சேஷியாயிருக்கிறானல்லன்; எல்லாங்கூடி யேகத்ரவ்யபரிணாமமென்னும் பேதாபேதவாதி. கர்மம்பண்ணிவைக்கைக்குத் தானுண்டாகில், அதின் பலம் புசிப்பிக்கைக்குக் கர்மமுண்டாகில், இனி, யீச்வராபேக்ஷை தானென், அதுகொண்டொருதேவை யில்லைகாணென்னும் - ஸாங்க்யவைசேஷிகர்கள். ஆகவிது வாய்த்து - மறைக்கையாவது. இதுக்கடி - தேஹஸம்பந்தமாயிறேயிருப்பது. ( விபரீதஜ்ஞானஜனனீம், ) அதுக்குமேலே, விபரீதஜ்ஞானத்துக்கு முத்பாதிகையாய். விபரீதஜ்ஞானமாவது-அநாத்மன்யாத்மபுத்தி. அதாவது - தேஹத்திலாத்மபுத்திபண்ணுகை. இத்தால், ஸ்வஸ்வரூபத்தை மறைத்தபடிசொல்லிற்று. ஆக, தன்னையும்மறைத்து, அவனையும் மறைத்ததிறே. இனி, தேஹமேயிறே - உள்ளது. இத்தால்த்தன்னரசு நாடாய்விட்டது என்றபடி. ( ஸ்வவிஷயாயாச்சபோக்யபுத்தேர்ஜனனீம் ) தன்னரசு நாடாய்விட்டால், இனி, கள்ளர், பள்ளிகள் ராஜ்யம் பண்ணுமித்தனையிறே. ஸ்வகார்யபூதமான சப்தாதிகளிலே, போக்யபுத்தியைப் பிறப்பிக்குமதாய். (தேஹேந்த்ரியத்வேன போக்யத்வேனஸூக்ஷ்மரூபேண சாவஸ்திதாம்,)

மூ.—தைவீம் குணமயீம் மாயாம், தாஸபூத: ஶரணா
கதோஸ்மி தவாஸ்மி தாஸ: இதி வக்தாரம் மாம் தாரய ||௧௬||

வ்யா.—போகாயதனமான தேஹரூபத்தாலும், போகோப கரணமான விந்த்ரியரூபத்தாலும், போக்யமான சப்தாதிரூபத் தாலும், இத்தனைக்கும் கிழங்கான ஸூக்ஷ்மப்ரக்ருதிரூபத்தாலு ம், அவஸ்திதையாய், நாலுவகைப்பட்ட பரிணாமத்தையுடைத்தா ய். ( தைவீம், ) தேவருக்கு க்ரீடாபரிகரமாய். ( குணமயீம், ) குணத்ரயப்ரசுரையுமாய் ; அதாவது - ஸ்வரூபந்தான் - குணத் ரயாத்மகமுமாயிருக்கை. அதில், சேதனர் பரிக்ரஹித்த சரீரங் கள் - தம:ப்ரசுரமாயும், ரஜ:ப்ரசுரமாயும், ஸத்வப்ரசுரமாயு மிருக்கும்.(மாயாம்,)விசித்ரகார்யகாரத்வத்தாலே, மாயாசப்தவா ச்யையாய், விசித்ரபரிணாமினியாகையாலே, ஆச்சர்யத்தையுடை த்தாய். ஆச்சர்யமெத்தாலே யென்னில்; பஞ்சபூதங்களுமேகத் ரவ்ய பரிணாமங்களாயிருக்க, அன்யோன்யம் பின்னரூபமாயும், போக்யபோகோபகரண போகஸ்தானங்களாயும், சித்ரபடம் போலே யாச்சர்யகரமாயிருக்கை. (மாம்தாரய.)இப்படிப்பட்ட ப்ரக்ருதியிலே யடக்கப்பட்டவென்னை, க்கடப்பித்தருளவேணு மென்கிறார். நாம் எடுத்துவிடுகைக்கடியாக, நீர்செய்துவைத்ததே தேனுமுண்டோ ; யென்கொண்டென்னை யெடுத்துவிடச்சொல் லுகிறது என்று, பெரியபெருமாள் திருவுள்ளமாக; யென்பக்கல் கைமுதலுண்டாய்ச் சொல்லுகிறேனோ; அனாதிகாலம் துஷ்கர்ம ங்களைப்பண்ணிப்போந்தேனே யாகிலும், தேஹாத்மாபிமானி யாய்போந்தேனேயாகிலும், சப்தாதிவிஷயப்ரவணனாய் போந் தேனேயாகிலும், ஸ்வரூபத்தை நிரூபித்தவாறே, உனக்கனன்யா ர்ஹசேஷமாயிருக்கும் என்னு மிவ்வளவாலே சொல்லுகிறேனெ ன்கிறார் (தாஸபூத:) என்று. அது - ஸர்வஸாதாரணமன்றோ, ஆ னபின்பு, நாம் கார்யம்செய்கைக் கும்முடைய பக்க லேதேனு மொருவ்யாவ்ருத்திவேணுமேயென்ன; ( சரணாகதோஸ்மி. தவா ஸ்மிதாஸஇதிவக்தாரம் ) சரணாகதோஸ்மிஎன்றும், தவாஸ்மிஎன் றும், தாஸ:என்றும், சொன்னேன். தேவரேயுபாயமென்றும், உபேயமென்றும், நான் - தேவருக்கநன்யார்ஹசேஷமென்றும், சொன்னேன்.(மாம்)இப்படி உக்திப்ரதனுபிருந்துள்ள வென்னை. ( தாரய. ) இவ்வுக்திமாத்ரத்தையே பற்றாசாகக்கொண்டு, கடப்

மூ.—ச்லோகம் ௭ ॥ தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர்விசிஷ்யதே। ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய: ॥

வ்யா.—பித்தருளவேணும்.௧॥(தேஷாமித்யாதி.) ஆகக்கீழ், நமச்சப்தார்த்தம் சொல்லிற்றாய்நின்றது. நமச்சப்தத்துக்கர்த்தம்-விரோதிநிவ்ருத்தியிறே. அவ்வளவும்போராதே இவருக்கு; பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷரூபகைங்கர்ய ஸித்தியும் வேணுமே. இக்கைங்கர்யோபயோகியுமாய், கைங்கர்யத்தோபாதி யாதரணீயமுமாய், ப்ராப்யபூமியிலு மனுவர்த்திக்குமவையான பரபக்திபரஜ்ஞானபரமபக்திகளை யபேக்ஷிப்பாராய், அதுக்குபூர்வபாவியாயிருந்துள்ள வனன்யப்ரயோஜனமான பக்திரூபாபன்னஜ்ஞானத்தை, ஸ்ரீ கீதோபநிஷதாசார்யன் அருளிச்செய்த ச்லோகத்ரயமுகத்தாலே யபேக்ஷிக்கிறார். (தேஷாம்) "சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந। ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ" என்கிற வைச்வர்யகைவல்யஸமவச் சரணார்த்திகளில் வைத்துக்கொண்டு. (ஜ்ஞாநீ) ஜ்ஞாநியானவன். (விசிஷ்யதே.) விசேஷமுடையனாகச் சொல்லப்படுகிறான். அவனுக்கேற்றமேதென்னில்; (நித்யயுக்தஏகபக்தி:) இதிறே - அவனுக்குள்ளவேற்றம். நித்யயுக்தனாகையாவது - ஒருப்ரயோஜனத்துக்காக வென்னைப்பற்றி, அது-கைப்பட்டவாறே யகலுகையன்றிக்கே, யென்னையே ப்ரயோஜனமாகப்பற்றுகை. ஏகபக்தியாவது - ஒருப்ரயோஜனத்தில் ஸ்நேஹத்தைப்பண்ணி, தத்ஸித்யர்த்தமாக வென் பக்கலிலும் ஸ்நேஹம்பண்ணுகையன்றிக்கே, யென்னையே ப்ரயோஜனமாகப் பற்றினவனாகையாலே, தன்ஸ்நேஹத்துக்கென்னையே விஷயமாக்குகை. (ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தமஹம்.) (ஜ்ஞாநிநோஹமத்யர்த்தம் ப்ரியோஹி) ஜ்ஞாநிக்கு நான் - அத்யர்த்தம் ப்ரியனாயிருப்பன் - யென்பக்கல் அவனுக்குண்டான ப்ரீதிக்குப் பாசுரமிடவொண்ணாது. அபிதேயவசனோ ரீத்தசப்த: - (ஸசமமப்ரிய:.) அவனுமெனக்கு ப்ரியனாயிருப்பன். தன்பக்கலவனுக்குண்டான ப்ரேமத்தை யத்யர்த்தமென்று சொல்லி, அவனிடத்தில் தனக்குண்டானப்ரேமத்தைக் குறையச்சொல்லுகிறது - என்கொண்டு; அவனுடைய ப்ரேமத்துக்குக்குறைந்ததோ தன்னுடைய ப்ரேமம் என்னில்; அவன்றன்னளவிலேயாயிருக்கும் - அவன்ப்ரீதி ; தன்ப்ரீதி - தன்னளவிலேயாயிருக்கும். அணுபூதனுக்குள்ள- வளவேயோ, விபுவுக்கும். ஞானப்படி கல

மூ.—உதாராஸ்ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் । ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் ॥ பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே । வாஸுதேவஸ்ஸர்வமிதி

---

வ்யா.—ங்கிளுல்ப்போலன்றே, கடல்கலங்குவது. ஆயிருக்க, அவன்ப்ரேமத்துக்கு என்ப்ரேமமெங்கே கிடப்பது என்றருளிச்செய்கிறான் தன்வாத்ஸல்யாதிசயத்தாலே. அன்றிக்கே, ஸர்வசக்தியான தன்னாலும் அபரிஹார்யமாயிருக்கையாலே, அதுவே எனத்திருக்குமென்கிறானாகவுமாம். "ஸயா நாஸெ ஹார்யாலும்" பரிஹரிக்கவொண்ணாதபயத்தை விளைப்பிக்குமதொன்றிறே. பயநிவ்ருத்திக்குடலாமவையே, பயத்துக்குடலாம்படியிறே-யவன் ப்ரேமமிருப்பது. (உதாராஸ்ஸர்வ ஏவைதே) யாவர் சிலர் யாதொன்றையபேக்ஷிக்குமிடத்தில், தேவதாந்தரங்கள் பக்கலாதல், மநுஷ்யர் பக்கலாதலன்றிக்கே, யென்பக்கலிலேயே யபேக்ஷிக்கிறார்கள்; அவர்களத்தனைவருமுதாரர். (ஜ்ஞாநீது) அவர்களில் வைத்துக்கொண்டு விலக்ஷணனாகிறான் - ஜ்ஞாநீ. அவனுக்கு வைலக்ஷண்யமென்னென்னில்; (ஆத்மைவ) ஜ்ஞாநியானவன் - யெனக்காத்மாவாயிருப்பன். யெனக்குதாரகன் என்றபடி. அவதாரணத்தாலே, ஒரு காலத்திலிவன் - தாரகனாய், காலாந்தரத்தில் மற்றைப்படியாயிருக்கையன்றிக்கே, எப்போதுமொக்கவிவனே - தாரகனென்கிறது. ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தாளொருசேதனன், "உண்ணுஞ்சோறுபருகுநீர்" என்கிறபடியே தாரகாதிகளெல்லாமீச்வரனே யென்று நினைத்திருக்கை - ப்ராப்தம். ஆயிருக்க, இது - விபரீதமாயிருந்ததீயென்ன, (மேமதம்.) ஆனாலும் நினைத்தபடி நினைத்திடுக, முந்துறமுன்னமென் நினைவிதுவேயென்கிறான். (ஆஸ்திதஸ்ஸஹியுக்தாத்மா மாமேவாநுத்தமாங்கதிம்.) (அநுத்தமாங்கதிம்மாமேவ) தன்னையொழிந்ததாய், தனக்குமேலாயிருப்பதொன்றின்றிக்கே, பரமப்ராப்யனை யென்னையே. (யுக்தாத்மா) கூடினவனாய். (ஆஸ்திதஸ்ஸஹி) இப்படித்யானம் பண்ணுவான்-அவனேயிறே. (பஹூநாம்ஜன்ம நாமந்தே ஜ்ஞானவான் மாம்ப்ரபத்யதே) (பஹூநாம் ஜன்மநாமந்தே) யாவனொருவன் அனேக ஜன்மங்கள்கூடி, யென்னையேயாராதித்து, ஜன்மாந்தரத்திலே. (ஜ்ஞானவான்) மதேகவிஷயகஜ்ஞானவானாய். (மாம்) என்னை. (வாஸுதேவஸ்ஸர்வமிதி) "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்

மூ.—ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥ இத்யாதி ஶ்லோகத்ரயோதித ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ ॥ ம ॥ புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வநந்யயா । பக்த்யா த்வநந்யயா ஶக்ய: மத்பக்திம் லபதே பராம் இதி ஸ்தாநத்ரயோதித பரபக்தியுக்தம் மாம் குருஷ்வ ॥ மக

வ்யா.—ஸர்வம்'' என்றும், ''மாதாபிதாப்ராதா'' என்றும், ''யெல்லாங்கண்ணன்'' என்றும் சொல்லுகிறபடியே, த்யஜித்தவை யெல்லாம்-அவனேயென்று. (ப்ரபத்யதே.) பற்றுகிறான் - அத்யவஸிக்கிறானென்றபடி. (ஸமஹாத்மா) அவன் - அறப்பெரியன். ஹேயப்ரதிபடனுகையாலே, நமக்கு ஸம்பந்தஜ்ஞானமுண்டாகலாய்; பத்தனானவிவன், அத்தையுணர்ந்திருக்கையாலே, அவனுக்கு நாமுமொப்பாகமாட்டோம். (ஸுதுர்லப:.) அங்ஙனிருப்பானொருவனை, ஸம்ஸாரத்திலுங்கிடையாது, பரமபதத்திலுங்கிடையாது என்கிறான். தேசிகரையுமுள்படக்கலக்கவற்றானவிருள் தருமாஞாலத்திலிருந்தே, தெளிந்திருக்குமதிகாரியை, யுபயவிபூதியிலுங்கிடையாதென்றபடி. நாமுமாசைப்பட்டே போமித்தனைபோக்கி, இவன்றனையதிகாரியை நமக்குங்கூடக் கிடையாதுகாண் என்கிறான். (இதி) இப்படி. (ச்லோகத்ரயோதிதஜ்ஞானினம் மாங்குருஷ்வ.) கீழ்ச்சொன்னச்லோகத்ரயத்திலும் ப்ரதிபாதிக்கப்பட்ட ஜ்ஞானத்தையுடையனும்படி, யென்னைப்பண்ணியருளவேணும். முதல்ச்லோகத்திலவனே நமக்குப்ரியன் என்றான். இரண்டாம்ச்லோகத்திலவனே-நமக்கு தாரகன் என்றான். மூன்றாம்ச்லோகத்தில், இவையிரண்டுக்கும் விஷயமுள்ளது, அத்தனை யதிகாரியைக்கிடைக்கிலன்றோ, முந்தறமுன்ன மவனைக்கிடையாதென்றான். ம(புருஷஸ்ஸபர: பார்த்தபக்த்யாலப்யஸ்த்வனன்யயா. பக்த்யாத்வனன்யயாசக்ய:. மத்பக்திம்லபதேபராம் இதிஸ்தானத்ரயோதித பரபக்தியுக்தம்மாங்குருஷ்வ.) முன், பரபக்த்யாதிகளுக்குப் பூர்வபாவியான பக்திரூபாபன்னஜ்ஞானத்தை யபேக்ஷித்தார்; இங்கு, கைங்கர்யத்துக்குப் பூர்வபாவியான பரபக்த்யாதிகளை யபேக்ஷிக்கிறார். அதில், பரஜ்ஞானபரமபக்திகள் - பரபக்திகார்யமாய், அதுண்டானுலுண்டாமதாகையாலே, அத்தைப்ரதானமாய், எட்டாமோத்திலும், பதினோராமோத்திலும், பதினெட்டாமோத்திலும், புருஷஸ்ஸபர: பார்த்தபக்த்யாலப்யஸ்த்வனன்யயா என்

மூ.—𑌪𑌰𑌭𑌕𑍍𑌤𑌿𑌪𑌰𑌜𑍍𑌞𑌾𑌨 𑌪𑌰𑌮𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑍇𑌕𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌂 𑌮𑌾𑌂 𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵. மூ|| 𑌪𑌰𑌭𑌕𑍍𑌤𑌿 𑌪𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑌰𑌮𑌭𑌕𑍍𑌤𑌿 𑌕𑍃𑌤𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌨𑌵𑌰𑌤 𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑌿𑌶𑌦𑌤𑌮𑌾𑌨𑌨𑍍𑌯𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌪𑍍𑌰𑌿𑌯 𑌭𑌗𑌵𑌦𑌨𑍁𑌭𑌵𑍋𑌽𑌹𑌂, 𑌤𑌥𑌾𑌵𑌿𑌧 𑌭𑌗𑌵𑌦𑌨𑍁𑌭𑌵 𑌜𑌨𑌿𑌤𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌕𑌾𑌰𑌿𑌤𑌾𑌶𑍇𑌷𑌾𑌵𑌸𑍍𑌥𑍋𑌚𑌿𑌤

வ்யா.—றும், பக்த்யாத்வனன்யயாசக்ய: என்றும், மத்பக்திம் லபதேபராம்என்றும், ஸ்ரீகீதோபநிஷதாசார்ய னருளிச்செய்த பரபக்தியுக்தனாகவென்னைப் பண்ணியருளவேணுமென்கிறான் மூ|| ( பரபக்திபரஜ்ஞான பரமபக்த்யேகஸ்வபாவம்மாம்குருஷ்வ. ) இவை மூன்றுமெனக்கு யாவதாத்மபாவியாக வுண்டாகவேணுமென்கிறார். இங்கு, பரபக்த்யாதிகளை யபேக்ஷிக்கிறது, கைங்கர்யோபகரணதயாவல்லது, நிரபேக்ஷோபாயஸ்வீகாரம் பண்ணினவராகையாலேயுபாயதயாவல்ல. பரபக்த்யாதிகளால் பண்ணுங் கைங்கர்யவேஷத்தை யிரண்டாஞ்சூர்ணையிலே பரக்கவருளிச்செய்திருக்க, விங்கும் சொன்னால் புனருக்தமன்றோவென்னில்; அங்கு, கைங்கர்யருசியை யுண்டாக்கவேணுமென்று, பிராட்டிதிருவடிகளிலே சரணம்புகநினைத்து, ஏவம்விதமான கைங்கர்யத்திலே யெனக்கு ருசியைத்தந்தருளவேணுமென்கைக்காக, கைங்கர்யஸ்வரூபத்தை யருளிச்செய்தார்கீழ்; இங்கு, ருசிபூர்வகமாகப் பெரிய பெருமாள் திருவடிகளிலே சரணம்புக்கு,கைங்கர்யம் தன்னையே யபேக்ஷிக்கிறாராகையாலே, புனருக்திதோஷமில்லை.மூ (பரபக்திபரஜ்ஞானபரமபக்திக்ருத ) இப்பரபக்த்யாதிகளாலே பண்ணப்படுமதான.(பரிபூர்ண) அதாவது-ஸ்வரூபரூபகுண விபூதிகளித்தனையு.மொருபோகியாகவனுபவிக்கை. (அனவரத) அதாவது - அவிச்சின்னமாயிருக்கை.அதாவது-விஷயாந்தரம் கலசாதிருக்கை. (நித்ய) யாவதாத்மபாவி. (விசததம) விசதமாவது - பரபக்திதசையிலனுபவம். விசததரமாவது - பரஜ்ஞானதசையிலனுபவம். விசததமமாவது-பரமபக்திதசையிலனுபவம். ( அனன்யப்ரயோஜன) இவ்வனுபவத்தால் பிறக்கும் ப்ரீதியும் வேண்டா, ப்ரீதிகாரிதமான கைங்கர்யமும் வேண்டாவென்னும்படி, தானேஸ்வயமாயிருக்கை. ( அனவதிகாதிசய ப்ரியபகவதனுபவோஹம்) அனவதிகமான வதிசயத்தையுடைத்தான பகவதனுபவத்தையுடையனான். ( ததாவிதபகவதனுபவ ஜனிதப்ரீதிகாரிதா சேஷாவஸ்தோசித )

மூ — 𑌅𑌶𑍇𑌷𑌶𑍇𑌷𑍈𑌕𑌰𑌤𑌿𑌰𑍂𑌪 𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑌿𑌙𑍍𑌕𑌰𑍋 𑌭𑌵𑌾𑌨𑌿. ௧௫ ॥ 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌮𑌤𑍍𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌤𑌯𑌾𑌽𑌵𑌕𑍍𑌲𑍃𑌪𑍍𑌤 𑌸𑌮𑌸𑍍𑌤𑌵𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌹𑍀𑌨𑍋, 𑌅𑌨𑌨𑍍𑌤𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌪𑌾𑌪𑌾𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍋, 𑌅𑌨𑌨𑍍𑌤𑌮𑌦𑌪𑌚𑌾𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍋,

---

வ்யா.—அப்படிப்பட்ட ப்ரீதிகாரிதமாய், யெல்லாவவஸ்தைகளிலுமனுகூலமாயிருக்கிற. ( அசேஷசேஷைகரதிரூப ) ஸகலசேஷவ்ருத்தியொன்றிலுமுண்டான வபிநிவேசத்தை வடிவாகவுடையனாய்க்கொண்டு. ( நித்யகிங்கரோபவாநி. ) நித்யகைங்கர்யத்தைப்பெற்று, அனுபவிக்கப் பெறுவேனாகவேணும். அன்றிக்கே, நித்யசப்தம் புநராவ்ருத்திரஹிதமான தேசத்தைச்சொல்லி, அதிலேகிங்கரோபவாநி என்னவுமாம். இப்படி, த்வயம் - வ்யாக்யாதமாயிற்றதாகில், இனிமேல்ச் செய்கிறதென்னென்னில்; இவ்வதிகாரிபக்கல், பெரியபெருமாள், தமக்குண்டான ப்ரீத்யதிசயத்தாலே, கீழ்ச்சொன்னவற்றை யனுபாஷித்துக்கொண்டு, உமக்கு, மத்ப்ரஸாதத்தாலே, ஸர்வமும் குறைவறவுண்டாயிடுகவென் றருளிச்செய்து, இவருடையஹ்ருதயத்தை ஸம்துஷ்டமாக்குகிறார். இப்படி, பெரியபெருமாள் அருளிச்செய்தாரென்று, நாங்கள் விச்வஸித்திருக்கும்படி யெங்ஙனேயென்று எம்பார்கேட்க ; யெனக்குப் பெரியபெருமாள், தம்முடைய சீலாதிகுணங்களை - கரதலாமலகமாகக்காட்டித்தந்து, அவர்சொல்லிவிக்கச்சொன்ன வார்த்தையாகையாலே, அவரருளிச்செய்த வார்த்தையென்று, விச்வஸிக்கத்தட்டில்லையென்றெம்பெருமானார் அருளிச்செய்தார். ௧௫॥ (ஏவம்பூதமத்கைங்கர்யப்ராப்தி ) இப்படிப்பட்ட வென்னுடைய கைங்கர்யலாபத்துக்கு. ( உபாயதயாவக்லுப்த ) உபாயமாகவேதாந்தங்களிலே சொல்லப்பட்ட கர்மஜ்ஞானபக்திகளென்ன. ( ஸமஸ்தவஸ்துவிஹீநோபி, ) இவ்வுபாஸநாங்கமான ஜீவபரயாதாத்ம்யஜ்ஞானமென்ன, இதுக்கடியான வர்ணாச்ரமாசாரமென்ன, இவையெல்லாவற்றுக்கு மடியான வநாதித்வாத்யாத்மகுணங்களென்ன, இங்ஙன் சொல்லப்பட்டவை யெல்லாமுமக்கில்லையேயாகிலும். ( அனந்ததத்விரோதி பாபாக்ராந்தோபி, ) இவையில்லாமையேயன்றியே, இவற்றுக்கு விரோதியான வனந்தபாபங்களாலே யாக்ராந்தராயிருந்தீரேயாகிலும். ( அனந்தமதபசாரயுக்தோபி, ) கீழ்ச்சொன்ன விரோதிபாபங்கள் மாத்ரமன்றிக்கே,

மூ.—அநந்தமதீயாபசாரயுக்தோபி, அநந்தாஸஹ்யாபசாரயுக்தோபி, ஏதத்கார்யகாரணபூதாநாதி விபரீதாஹங்கார விமூடாத்மஸ்வபாவோபி, ஏததுபயகார்யகாரணபூதாநாதி விபரீதவாஸநாஸம்பத்தோபி, ஏததநுகுணப்ரக்ருதிவிசேஷஸம்பத்தோபி, ஏதந்மூலாத்யாத்மிகாதிபௌதிகாதிதைவிக

---

வ்யா.—முடிவில்லாத நம்விஷயமான வபசாரத்தோடே கூடியிருந்தீரேயாகிலும். (அனந்தமதீயாபசாரயுக்தோபி,) இவ்வளவன்றிக்கே,மதபிமானந்தர் பூதராயிருப்பார் திறத்திலுண்டான வளவிறந்தவபசாரத்தோடு கூடியிருந்தீரேயாகிலும். (அனந்தாஸஹ்யாபசாரயுக்தோபி,) நிர்நிபந்தனமாக பகவத்பாகவதவிஷயங்களிலுண்டான அளவிறந்த வபசாரத்தோடு கூடியிருந்தீரேயாகிலும்.(ஏதத்கார்யகாரணபூதாநாதி விபரீதாஹங்கார) இப்படிப்பட்ட பாபங்களுக்கு கார்யமுமாய், காரணமுமாயிருந்துள்ள வநாதியான விபரீதாஹங்காரம். விபரீதாஹங்காரமாவது - அஹமல்லாதவஸ்துவிலே, யஹம்புத்திபண்ணுகை - இதுக்கடி - பாபங்களாகையாலே, பாபகார்யமுமாய், பாபங்களுக்குமடி - தேஹாத்மாபிமானமாகையாலே, தான் - காரணமுமாயிருக்கும். அஹமர்த்தந்தான் - ஜ்ஞானந்தஸ்வரூபமாய், ப்ரக்ருதேஃபரமாயிருப்பதொன்றாயிருக்க, துஃகரூபமுமாய், ஜடமுமாய், ஸததபரிணாமியுமான ப்ரக்ருதியிலே யஹம்புத்திபண்ணுகை - பாபகார்யமுமாய், பாபகாரணமுமாயிருக்குமிறே. இத்தால் வருமவத்யமேதென்ன ; (விமூடாத்மஸ்வபாவோபி,) இப்படிப்பட்ட வஹங்காரத்தாலே மறைக்கப்பட்ட வாத்மாவினுடைய சேஷித்வஸ்வரூபத்தை யுடையீராயிருந்தீரேயாகிலும் (ஏததுபயகார்யகாரணபூதாநாதி விபரீதவாஸனாஸம்பத்தோபி,) கீழ்ச்சொன்ன பாபங்களுக்கு மஹங்காரத்துக்கும், கார்யமுமாய், காரணமுமாய், அநாதியுமாய் போருகிறதுர்வாஸனையாலே கட்டுண்டிருந்தீரேயாகிலும். (ஏததநுகுணப்ரக்ருதிவிசேஷ ஸம்பத்தோபி,) இவற்றுக்கெல்லாம் காரணமான துஷ்ப்ரக்ருதியாலே, யொருஸர்வசக்தி பிரிக்கப்பாற்கிலுமரிதாம்படி பிணையுண்டிருந்தீரேயாகிலும். (ஏதந்மூலாத்யாத்மிகாதி பௌதிகாதிதைவிக) இப்ரக்ருதி ஸம்பந்தமடியாகவருகிற தாபத்ரயங்கள். (ஆத்யாத்மிக) மாவது

மூ.—ஸுகது:கதத்தேது ததிதரோபேக்ஷணீய விஷயாநுபவஜ்ஞாந ஸங்கோசரூப மச்சரணாரவிந்தயுகளைகாந்திகாத்யந்திக பரபக்திபரஜ்ஞாநபரம

வ்யா.—ஆதியும், வ்யாதியும். ஆதியாவது - "காமக்ரோதபயத்வேஷலோபமோஹவிஷாதஜா:. சோகாஸூயாவமாநேர்ஷ்யாமாத்ஸர்யாதிமயாஸ்ததா" என்கிறவை. வ்யாதியாவது - "சிரோரோகப்ரதிச்யாய ஜ்வரசூலபகந்தரை:. குல்மார்சஸ்ச்வயதுச்வாஸச்சர்த்யாதிபிரநேகதா- ததாக்ஷிரோகாதீஸாரகுஷ்டாங்காமயஸஞ்ஜ்ஞகை:" என்னுமவை. (ஆதிபௌதிக) மாவது - "பசுபக்ஷிமநுஷ்யாத்யை: பிசாசோரகராக்ஷஸை:. ஸரீஸ்ருபாத்யைச்ச ந்ருணாம் ஜந்யதே சாதிபௌதிகா:" என்கிறவை. (ஆதிதைவிக) மாவது-"சீதோஷ்ணவாதவர்ஷாம்பு வைத்யுதாதிஸமுத்பவ:" என்கிறவை. (ஸுகது:கதத்தேது) இப்படி மூன்று வகைப்பட்ட ஸுகது:கங்களென்ன, அதுக்குஹேதுவாயிருந்துள்ள. அவைதான்-எவையென்னில்; (ததிதரோபேக்ஷணீயவிஷய) தனக்கும் பிறர்க்குமுபேக்ஷணீயரான மத்யஸ்தர்க்கு முண்டாமதான காமக்ரோதாதிவிஷயங்களென்ன, இவற்றினுடைய. தனக்கு, காமமன்வயத்தில் ஸுகஹேதுவாய், வ்யதிரேகத்தில்துக்கஹேதுவாயிருக்கும். தனக்கு, க்ரோதம் எதிரியைநலியும்போது ஸுகஹேதுவாய், அதுவேயெதிரியளவில் பலியாதொழிந்தால், துக்கஹேதுவாய்யிருக்கும். ஸ்வேதரரானவனுகூலர்க்கு, காமமன்வயத்தில் ஸுகஹேதுவாய், வ்யதிரேகத்தில்துக்க ஹேதுவாயிருக்கும். ஸ்வேதரரானப்ரதிகூலர்க்கு,காமமன்வயத்தில் துக்கஹேதுவாய், வ்யதிரேகத்தில் ஸுகஹேதுவாயிருக்கும். மத்யஸ்தர்க்கு, காமாதிகளுடைய அன்வயவ்யதிரேகங்களிலுண்டான ஸுக துக்கங்களுபேக்ஷணீயங்களாயிருக்கும். (அநுபவஜ்ஞானஸங்கோசரூப) இப்படி ஸ்வகீயமாயும், பரகீயமாயும், உபேக்ஷணீயருடையதாயுமிருந்துள்ள விஷயங்களினனுபவமானது - ஜ்ஞானஸங்கோசரூபமாயிருக்கும். ஆகையாலே, யஜ்ஞானமடியாக வுண்டாகக்கடவ பரபக்த்யாதிகளுக்கு, விஷயானுபவந்தான்-ப்ரதிபந்தகமாயிறே - யிருப்பது. அத்தையருளிச்செய்கிறார் (மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்திபரஜ்ஞான பரம

மூ—பக்திவிக்நப்ரதிஹதோபி, யேநகேநாபி ப்ரகாரேண த்வயவக்தா த்வம், கேவலம் மதீயயைவ தயயா, நிஶ்ஶேஷ விநஷ்ட ஸஹேதுக

வ்யா.—பக்திவிக்னப்ரதிஹதோபி, ) நிரதிசயபோக்யமான வென்திருவடிகளிலே, நித்யமா, யேகரூபமாயிருந்துள்ள பர பக்த்யாதிகளுக்கு விக்னமாயிருந்துள்ள விஷயானுபவத்தாலே யழிந்திருந்தீரேயாகிலும். ஆக, மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத் யந்திகபரபக்திபரஜ்ஞான பரமபக்திவிக்னதயாவஸ்தித உத்ஜ்ஞா னஸங்கோசரூப தஜ்ஜநிதரோபேக்ஷணீய விஷயானுபவஜனிதாத்யா த்மிகாதிபௌதிகாதிதைவிக ஸுகதுக்காதீன ப்ரக்ருதிஸம்பந்த ஹேதுபூதவிபரீதவாஸநாமூல விபரீதாஹங்கார காரணநாநாவிதா பசாரயுக்தராயிருந்தீரேயாகிலும் என்றபடி. ( யேனகேநாபிப்ர காரேண ) ஏதேனுமொருவகையாலே. ( த்வயவக்தா ) த்வயானு ஸந்தானமேயாய்த்துச்செய்யவேண்டுவது ; அதுதன்னிலுமொ ருநியதியில்லை, யேநகேனாபிப்ரகாரேண, ஸஹ்ருதயமாகிலுமாம், அஹ்ருதயமாகிலுமாம், ஆர்த்தனாகிலுமாம், த்ருப்தனாகிலுமாம், அர்த்தஸஹிதமாகிலுமாம், அர்த்தவிதுரமாகிலுமாம் ; அதிலொ ருநிர்ப்பந்தமில்லை. முதலிலே மந்த்ராந்தரங்களாகவொண்ணாது, அதொழிந்தாலும், வ்யாபகாந்தரங்களாகவொண்ணாது, அதொ ழிந்தாலும், திருமந்த்ரமுமாக வொண்ணாது, த்வயத்திலேயா ய்த்திளைப்பாறவேண்டுவது. அதுதன்னிலும், பூர்வகண்டானு ஸந்தானமுமமையாது, உத்தரகண்டானுஸந்தானமுமமையாது, உபயமுமாகவேணும், எதுக்காகவென்னில்; பூர்வகண்டமாத்ரமனு ஸந்தித்தீராகில், அதில்ச்சொன்ன சரணவரணம் - ஸர்வஸாதாரண மாகையாலே, உமக்குப் புருஷார்த்தமேதோவென்ன வேண்டிவ ரும். உத்தரகண்டமாத்ர மனுஸந்தித்தீராகில், அதில்ச்சொன்ன ப்ராப்யம் - ஸாதனாந்தர ஸாதாரணமாகையாலே, உமக்கு ஸாத னமேதோவென்னவேண்டிவரும். இக்குறைகளெல்லாம் - தீரவே ண்டியிருந்தீராகில், த்வயத்திலேயாய்த் திளைப்பாறவேண்டுவது. ( த்வம், ) அப்படிப்பட்ட வனுஸந்தானம்-கைபுகுந்தநீர். ( கேவ லம் மதீயயைவதயயா, நிச்சேஷவிநஷ்டஸஹேதுக ) த்வயா னுஸந்தானமேஹேதுவாக இருகரையுமழியப்பெருகின வென் க்ருபையொன்றாலுமே நிச்சேஷமாகவும், ஸஹேதுகமாகவும்

மூ.—மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி விக்ந, மத்ப்ரஸாதலப்த மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திः; மத்ப்ரஸாதாதேவ ஸாக்ஷாத்க்ருத யதாவஸ்தித மத்ஸ்வரூப ரூப குண விபூதி லீலோபகரண விஸ்தாரோ, அபரோக்ஷஸித்த மந்நியாம்யதா ( § மதநுஷவோ) மத்தாஸ்யைக (§ஸ்வபாவாத்ம ஸ்வபாவாத்மஸ்வரூபோ,

வ்யா.—வினஷ்டமான.(மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்திபரஜ்ஞான பரமபக்திவிக்ன.,) நிரதிசயபோக்யமான வென்திருவடிகளிலே, நித்யமாய், ஏகரூபமாகச்செல்லுகிற பரபக்திபரஜ்ஞான பரமபக்திகளுக்கிடைச்சுவரான மூன்சொல்னவற்றையுடையீராய். ஆனால், விரோதி - நசித்தவாறே பரபக்த்யாதிகள்-தனக்குத்தானே யுண்டாகிறனவோ வென்னில்; (மத்ப்ரஸாத லப்த) அதுக்குமேலே, யிதுவுமென்னுடைய க்ருபையாலேயே யுடையீராகக்கடவீர். பெறுவது-தானேதென்னு மபேக்ஷயிலே யருளிச்செய்கிறார் ( மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்திபரஜ்ஞான பரமபக்திः,) இது - காணும் பெறும்பேறு. இவ்வளவேயன்று, இன்னமுமுண்டு; ( மத்ப்ரஸாதாதேவஸாக்ஷாத்க்ருதயதாவஸ்தித மத்ஸ்வரூபரூபகுண விபூதிலீலோபகரண விஸ்தாரः, ) அதுக்குமேலே, ஸஹகார்யந்தர நிரபேக்ஷமான வென்க்ருபையாலே ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாய், உள்ளபடியிருந்துள்ள வென்னுடையஸ்வரூபமென்ன, ரூபமென்ன, குணமென்ன, விபூதியென்ன, லீலோபகரணமான விவ்விபூதியென்ன, இவற்றினுடைய பரப்பையுடையீராய். இங்கு, யதாவஸ்திதஎன்கிறார், அயதாவாகவும் கண்டதுண்டோவென்னில் ; உண்டு, எங்ஙனேயென்னில் ; வேதாந்தத்தில், ப்ரதேசவிசேஷத்திலே, கார்கிவித்யையென்றொருவித்யையுண்டு, அதிலே யெழுதக்கண்டோம். அன்றிக்கே, நீயாகவருந்திக்காணுமன்றிறே அயதாவாகக்கடவது; யென்ப்ரஸாதமடியாகக்காண்கையாலே, யதாவஸ்திதமாகக் குறையில்லையென்றுமாம். அதுக்குமேலே, ( அபரோக்ஷஸித்தமன்னியாம் யதாமத்தாஸ்யைகஸ்வபாவாத்மஸ்வரூபः, ) ச்ரவணமநநாதிகளால் ஸித்திக்கையன்றிக்கே, ஸாக்ஷாத்காரத்தாலே ஸித்தித்தமன்னியாம்யதையையும், மத்தாஸ்யத்தையுமே - ஸ்வபாவமாகவுடைத்தான வாத்மஸ்வரூபத்தையுடையீராய், ஸ்வரூபஸா

§ குண்டலித்தவைகளிரண்டும் வ்யாக்யாநத்தில் காணவில்லை.

மூ.— மதேகாநுபவ:, மத்தாஸ்யைகப்ரிய:, பரிபூர்ணாநவரத நித்யவிஶததமாநந்ய ப்ரயோஜந

வ்யா.—க்ஷாத்காரம்பிறந்தால், தத்கதமான ஶேஷ்வைரகதியாம் யத்வமும், ஈச்வரைகதாஸத்வமும், தன்னடையே வெளிச்செறிக்குமிறே. அப்படி, யாத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்தவராய். (மதேகாநுபவ:) ஸ்வரூபஸாக்ஷாத்காரம் பிறந்தால், அவனை விஷயீகரித்தல்லது நில்லாதே; ஸ்வஸ்வரூபத்தைத்தெளியக்கண்டால், ஸ்வரூபகதமான ஜ்ஞாநாநந்தங்களளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே, ஸ்வரூபயாதாத்ம்யத்தளவும் செல்லுமிறே. ஸ்வரூபயாதாத்ம்யமாவது – ஆத்மகதமான பகவதத்யந்தபாரதந்த்ர்யாதிகளிறே. ஆகையாலே, கைவல்யம்போலன்றிக்கே, யென்னை யொருவனையுமே - யனுபவவிஷயமாகவுடையீராய். அவதாரணத்தாலே, ஸ்வரஸத்துக்குடலாகவனுபவிக்கு மதிகாரியை வ்யாவர்த்திக்கிறது. தனக்கென்று, தன்னையனுபவிக்குமனுபவத்தோடு, தனக்கென்று, ஈச்வரனை யனுபவிக்குமனுபவத்தோடு வாசியில்லை. ஆக வித்தால்ச்சொல்லித்தாயிற்று - ஸ்வரூபதர்சனத்தில் வந்தால், யெனக்கு சேஷியென்று - அவனைதர்சிக்கையன்றிக்கே, அவனுக்கு சேஷமென்று - தன்னைதர்சிக்கையும், தர்சித்தால், அனுபவத்திலவனே-விஷயமாகையும். இவ்வர்த்தத்தில் ப்ரமாணம் "அஹமன்னம்" என்னுமிதுவே. ஆனால், அன்னம்போலே யாகவொண்ணாது, சேதநனுனவாசி - ஸித்தித்திடுகளன்றாய்த்து "அஹமன்னாத:" என்றது. சேதனனுக்கிறே யுபேயத்திலுகப்புண்டாவது. அது - இன்றிக்கேயொழிந்தால், புருஷார்த்தமாக மாட்டாதே. ( மத்தாஸ்யைகப்ரிய:, ) இவனை யனுபவிக்கப்புக்கால், அவ்வளவிலே பர்யவஸிக்கும்படியாயன்றேயிருப்பது; "ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னிச்செய்வதென்னெனினில்; பின்னை"வழுவிலாவடிமை செய்யவேண்டும்" என்றாரிறே. "எம்மாவீட்டுத்திறமும் செப்பம்நின் செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்றிறே ஸ்வரூபமிருப்பது. அனுபவஜனிதப்ரீதிகாரிதமிறே - கைங்கர்யம். இவ்வவதாரணத்தால் வ்யாவர்த்யம் - தனக்கென்னப்பண்ணுமது; இது-தான்கூடாதென்று கழித்ததிறே, *யுத்தரகண்டத்தில் நமச்சப்தம். யெனக்குப்பண்ணும் கைங்கர்யத்தையே-ப்ரீதிவிஷயமாகவுடையீராய். ( பரிபூர்ணாவரத நித்யவிசததமாநந்ய ப்ரயோஜநந

மூ.—வயிகாதிஶயவ்ரிய ஃஉ-நஂஹவவஷ்வஂ, ஃயாவிய ஃஉ-நஂஹவ ஜநிதாநவயிகாதிஶய வ்ரீதிகாரிதா ஶெஷாவவெஷாஙிதா ஶெஷஶெஷ ைகாதி ரஂவ நித்யகிஂகரொஹவ மச॥ஷவஂஹவெதாஸி.

வ்யா.—வதிகாதிசயப்ரிய மதனுபவஸ்த்வம்,) பரிபூர்ணமாய், க்ஷணந்தோறுமிடைவிடாதே நித்யமாய், ப்ரத்யக்ஷமென்னலாம்படியாய், அனன்யப்ரயோஜனமாய், ப்ரஹ்மாதிகளுடைய வதிசயத்தையும் கால்க்கடைக்கொண்ட வென்னுடைய வனுபவத்தையே-ப்ரீதிபாத்ரமாகவுடையீரானநீர். (ததாவிதமதனுபவ ஜனிதான வதிகாதிசயப்ரீதிகாரித) அப்படிப்பட்ட வென்னுடைய வனுபவத்தாலுண்டான வனவதிகமானவதிசயத்தை யுடைத்தான ப்ரீதியாலே செய்விக்கப்பட்ட. (அசேஷாவஸ்தோசிதா சேஷசேஷைகரதிரூப நித்யகிஂகரோஹவ.) எல்லாவவஸ்தைகளிலு மனுகூலமாய், யெல்லாவடிமைகளிலுமுண்டான வபிநிவேசத்தையே-வடிவாகவுடையீராய்க்கொண்டு, யாவதாத்மபாவியனுபாவ்யமான கைங்கர்யத்தைப்பெற்று, அனுபவிக்கக்கடவீர். மச॥ (ஷவம்பூதோஸி.) பகவத்ப்ராப்த்யுபாயமாகச் சொல்லப்பட்ட வுபாஸநாங்கமாயிருந்துள்ள வர்ணாச்ரமாசாராதி விஹீனராயிருந்தீரேயாகிலும், உபாஸநாங்கவிரோதியான வனந்தபாபாக்ராந்தராயிருந்தீரேயாகிலும், அனந்தமதபசாரயுக்தரா யிருந்தீரேயாகிலும், அனந்த மதீயாபசாரயுக்தராயிருந்தீரேயாகிலும், அனந்தாஸஹ்யாபசார யுக்தராயிருந்தீரேயாகிலும், எதத்காரணபூதாநாதி விபரீதாஹங்கார விமூடாத்மஸ்வபாவராயிருந்தீரேயாகிலும், எதுபயஹேதுபூதாநாதி விபரீதவாஸநாஸம் பத்தராயிருந்தீரேயாகிலும், எதன்மூலபூதப்ரக்ருதிஸம்பந்தவிசிஷ்டராயிருந்தீரேயாகிலும், எதன்மூலாத்யாத்மிகாதிஸஂகதுக்கங்களென்ன, இவற்றுக்குஹேதுவாயிருந்துள்ளதிதரோபேக்ஷணீய விஷயங்களென்ன, இவற்றினுடைய வனுபவத்தாலுண்டான பகவத்ஜ்ஞானஸங்கோசரூபமான பரபக்த்யாதிவிரோதியாலே நஷ்டப்ராயராயிருந்தீரேயாகிலும், ஏதேனுமொருபடியாலே த்வயானுஸந்தானம் பண்ணப்பெறுவீரானால், ஸஹாயாந்தர நிரபேக்ஷமான வென்னுடைய க்ருபையாலேயே, யென்றிருவடிகளிலுண்டான பரபக்த்யாதிகளுக்கு விரோதியாமவையெல்லாம், ஹேதுக்களுடன், நிச்சேஷமாகநசித்து, யென்றிரு

மூ.—ஆத்யாத்மிகாதிபௌதிகாதிதைவிக து:க்க விக்ந கந்த ரஹிதஸ்த்வம்,

வ்யா.—வடிகளிலேயே பரபக்த்யாதிகளுண்டாகப் பெற்று, யென்னுடைய ஸ்வரூபாதிகளின்பரப்பையுள்ளபடி ஸாக்ஷாத்கரிக்கப்பெற்று, மந்நியாம்யதாதிகளையே- ஸ்வபாவமாகவுடைய வாத்மஸ்வரூபஸாக்ஷாத்காரம் பெற்று, மதேகாநுபவராய், மத்தாஸ்யைகப்ரியராய், பகவதநுபவத்தையே - யெல்லாவன் புக்குமிலக்காக்கி, ததாவித பகவதநுபவத்தாலுண்டான வனவதிகப்ரீதியாலே செய்விக்கப்பட்ட வசேஷாவஸ்தோசித ஸகலவிதகைங்கர்யமே - தேஹயாத்ரையாம்படி யாகக்கடவீர் என்று, பெரிய பெருமாளருளிச்செய்தவாறே, இவையெல்லாவற்றுக்கும் ஹேது வேதோவென்று பார்த்தவாறே, த்வயாநுஸந்தானமேயா யிருந்தது. இதிருந்தபடி யென்னெனில்; அதுக்குக்குறையுண்டோவென்ன, த்வயவசனமாத்ரத்தாலே யிப்பேறுண்டாகக்கூடுமோவென்ன ; அதிருந்தபடி கண்டோமுக்கு, ‘ ஏவம்பூதோஸி, என்று, சொல்லவேண்டும்படியாயோ வீதின் ப்ரபாவமிருப்பது. யெல்லாங்குறைவறவன்றோ வுமக்கிருக்கிறது. ஒருதேசவிசேஷத்திலுள்ளாரோபாதி, இச்சரீரத்தோடே யடிமைசெய்யும் படியாயிருக்கிறதன்றோவுமக்குஎன்ன ; தாபத்ரயாதிகளுக்கடியான விச்சரீரஸம்பந்தம் கிடந்தது. இதுக்கவஸானகாலமறிகிறிலேன். இங்கிருக்கும்நாளைக்குக் காலக்ஷேபம்பண்ணும் விரகறிகிறிலேன். வஸ்தவ்யபூமியேதென்றறிகிறிலேன். இப்படியிருக்க, எல்லாங்குறைவற்றேனாக வருளிச்செய்யும்படி - யுபச்சந்தனமாயிராநின்றதீயென்ன ; இதுவோ - நீர்சொல்லித்து ; இவ்வளவேயன்றிக்கே, இன்னமுமிதுசெய்யும்படி கேளீர்என்று, பெரியபெருமாளருளிச்செய்கிறார் ( ஆத்யாத்மிகாதிபௌதிகாதிதைவிக துக்கவிக்ந கந்தரஹிதஃ ) தாபத்ரயாதிகளால்வரும் துக்கமாகிற விக்னத்தினுடைய கந்தமுமற்றவராய். இச்சரீரத்தோடிருக்கச்செய்தே, தாபத்ரயத்தால்வரும் துக்ககந்தமறவர்த்திக்கப் போமோவென்னில்; (த்வம்,) நீரல்லீரோ, நீராகில் வர்த்திக்கக்குறையென்ன, ஏவம்பூதோஸிஎன்று, நான்சொல்லும்படியான வீறுடையீரல்லீரோ. அதாவது - காலம் குறுகாநின்றது, கர்மம் க்ஷயிக்கத்துடங்கித்து; கர்மம்க்ஷயிக்கப்ராப்ய மணித்தாகாநின்றது, என்று - அனந்த

மூ —அயகூ-ர-ந ஸாநுஸந்தா ஸநைவவக்தா,

வ்யா.—ரம் பெறுகிறப்பேற்றை யனுஸந்தித்து, இவற்றுல்வ ரும் துக்கங்களை மதியாதே வர்த்தியுமென்றபடி. யென்போல வென்னில்; அபிஷேகப்பட்டினிபோலே. அங்கனேயாகிலும், சரீர த்தோடிருக்கும் நாளைக்குக்காலக்ஷேபம் பண்ணுவதெத்தாலே யென்னில்; (த்வயமர்த்தானுஸந்தானேனஸஹ) த்வயத்தினுடைய வர்த்தானுஸந்தானத்தைப் பண்ணிக்கொண்டு, அதுவே- துணையா கவிரும். "நாட்டாரோடியல்வொழிந்து" என்கிறபடியே, ஸம் ஸாரத்தில் வ்யாவ்ருத்தனாய், கைங்கர்யப்ரார்த்தனேயேயாம்படி யிதுக்கு-உரியனாய்,"நாரணனை நண்ணினம்" என்கிறபடியே, பக வந்ந்யஸ்த பரனாயிருக்குமதிகாரிக்கு, த்வயத்திலர்த்தானுஸந்தா னமேயாய்த்துத் துணையாயிருப்பது. கீழே, த்வயவக்தா என் றது ; இங்கு, த்வயமர்த்தானுஸந்தானேன ஸஹஎன்கிறது. இது க்குக்கருத்தென்னென்னில் ; பகவத்விஷயீகாரத்துக்குப் பாசுர மேயமையும் ; காலக்ஷேபத்துக்குடலாமன்று, அர்த்தானுஸந்தா னத்தளவுமபேக்ஷிதமாயிருக்கும். ( ஸதைவம்வக்தா, ) ( ஏவம்வ க்தா, ) ' ஏவம், என்றது - இப்ரகாரத்தாலே யென்றபடி. அதா வது-கீழ், தாமொருப்ரகாரத்தாலும், முன்புள்ளார் படியாலும், இதிஹாஸப்ரக்ரியையாலுமாக, மூன்று ப்ரகாரத்தாலே சரணம் புக்கார். இதில், பூர்வர்கள் ப்ரக்ரியையுமொழிய, இதிஹாஸப் ரக்ரியையுமொழிய, இக்கத்யத்தில்ச் சொன்னவழியாலே, யென் றபடி. இன்னமிப்படி, யொருக்காலல்லாவொன்பதின் கால்சரண ம்புக்காலும், மறித்துமறித்து அங்கே சரணம்புகுமத்தனைபோ க்கி, வேறுபுகலில்லையேயிவர்க்கு. இப்படி சரணம்புகுகிறது, ம வன்ப்ரஸாதத்துக்காகவிறே ; அதுதானுமிதிலே ஸித்திக்கையா லே, ஏவம்ப்ரகாரத்தாலே யென்கிறார். ( வக்தா, ) நெஞ்சுக்குள் ளேவேண்டா; அனுபவம்வழிந்து புறப்பட்டசொல்லேயமையும். அன்றிக்கே, ( ஏவம்வக்தாத்வய மர்த்தானுஸந்தானேனஸஹ ) இக்கத்யத்தையனுஸந்திக்கவே, த்வயத்தை யர்த்தானுஸந்தானத் துடன் அனுஸந்தித்தீராகிறீர்; இரண்டும்பொருள் - ஒன்றேயிறே என்னவுமாம். ஆனாலொருக்கால் னுஸந்தித்தாலும் அமையுமோ வென்னில் ; ( ஸதா ) எப்போதும், எப்போதுமாக வேண்டுவா னென்னென்னில் ; உபாயாந்தரங்களும், உபேயாந்தரங்களும்,

மூ.—யாவச்சரீரபாதமத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ॥

வ்யா.—நடையாடும் நெஞ்சாகையாலே, அவைபுகிராமைக்காக ஸதாஎன்கிறது.அன்றிக்கே, இவ்வதிகாரிக்கு, ப்ரக்ருதிஸம்பந்தமும்,பகவத்ஸம்பந்தமுமிரண்டும், கூடக்கலசிவர்த்திக்கையாலே, ப்ரக்ருதிஸம்பந்த மிதரவிஷயங்களிலே மூட்டும்; பகவத்ஸம்பந்தம், ஸ்வரூபானுரூபவ்ருத்தியிலே மூட்டும். இங்ஙனேயிருக்கச் செய்தே, இவரிதரவிஷயங்களுக்கஞ்சி,பகவத்விஷயத்தைப்பற்றினவராகையாலே, பேற்கவே அதிலன்வயமில்லை. இனி, வ்ருத்திவிசேஷமோவென்றால், ஒருதேசவிஶேஷத்திலேயாகையாலே, சாலவிப்ரக்ருஷ்டமாயிருந்தது. இனி, யிருக்கும்நாளைக்குப்போது போக்கிதுவாயிருக்குமாகையாலே, "எப்போதும்'' என்கிறதென்றுமாம். ஆகிலு மிவ்விருப்புக்கவஸானமேதோவென்னு மபேக்ஷையிலே; ( யாவச்சரீரபாதம் ) என்கிறார். இவர்தாமிப்படிகேட்கிறது, உபாயாந்தரபரிக்ரஹம்பண்ணி, அதுமுடிந்தவளவிலேயோ ; அன்றியே, உபாஸனம் ஸமாபித்தாலும், "ப்ரதீக்ஷே'' என்று, தன்னளவும் பார்த்திருக்கவேண்டும்படியான கர்மாவஸானத்திலேயோ, என்று சங்கித்துக்கேட்கிறாரல்லர் உபாயாந்தரத்திலன்வயமில்லாமையாலும், அதின்றிக்கேயொழிந்தால், 'எப்போதொ' என்றுஸம்சயிக்கவேண்டாதே, "மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்'' என்று பரமாசார்யரருளிச்செய்துவைக்கையாலும். இனி, இப்ரச்னத்துக்குக் கருத்தென்னென்னில்; ப்ராப்யத்வரையாலும், காலம் நெடுகித்தோற்றுகையாலும், பரிக்ரஹித்தவுபாயம் - விளம்பஸஹமல்லாமையாலுமாகக் கேட்கவேண்டிவரும். நமக்கு ருசியுமுண்டாயிருந்தது, ஸ்வீகரித்தவுபாயமும் - கண்ணழிவற்றிருந்தால் இனியிவ்விருப்புக்கடி - அவன் நினைவாமத்தனையாகையாலே, அவனையே நிர்பந்தித்துக் கேட்கிறார். அதுக்குத்தரமருளிச்செய்கிறார் ( யாவச்சரீரபாதம் ) இச்சரீரமே - யன்றோவிளம்பம், ஆரம்பித்த கர்மமெல்லாம் பார்த்திருக்கவேண்டா, அதுதான் - நாளைக்கிநாள் க்ஷயித்தன்றோ வருகிறது, ஆகையால் சென்றதன்றோநிற்கிறது. ஆனாலும், விருள்தருமாஞாலத்திலெனக்கிருப்பு - துஸ்ஸஹமாயிருக்க, இருக்கும்படி கடாக்ஷித்ததேவரே, இருப்பிடமும்வகுத்துக்காட்டி யருளவேணுமென்ன; ( அத்ரைவஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ. ) ஸம்ஸாரவிபூதியிலுங்

